ஸ்ரீ

# போஜராஜ சரித்திரம்.

இது

சென்னை ப்ரெஸிடென்ஸிகாலெஜ் தமிழ்ப்பண்டிதராகிய

புன்னை

மாடபூசி - ஸ்ரீநிவாஸாசாரியரால்

வடநூலிலிருந்து

மொழிபெயர்க்கப்பட்டு,

சென்னை:

வி. என். ஜூபிலி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம்பதிப்பு.

1902.

# முகவுரை.

போஜராஜ சரித்திரம் என்னும் இச்சிறுநூல், முதலில் வடமொழியிற் செய்யப்பட்டுள்ளது. அதனை அம்மொழியிற் செய்தவர் இன்னார் என விளங்கவில்லை. இந்நூலுட் கூறப்பட்டுள்ள கவிகளின் சரித்திரங்களிற் சில, அவரவரைக்குறித்து எழுதப்பட்டுள்ள காலவரையறைகளுக்கு மாறாகக் காணப்படுகின்றன வெனச் சிலர் கூறுகின்றனர். ஆயினும் ஒரே பெயரையுடைய இருவர் வெவ்வேறு காலங்களில் இருந்து ஒரேவிதமான அபிப்பிராயத்தை வெளியிட்டனரெனக்கூறுவது அதற்குத் தகுந்த சமாதானமாகுமெனத் தோன்றுகின்றது.

எங்ஙனமாயினும் இந்நூலில் அவரவர் கூறியனவாகக் காணப்படும் விஷயங்களின் சிறப்பு, ஐயந்திரிபறக் கற்றுணர்ந்த அறிஞர்க்கும் ஆனந்தத்தை விளைக்குமென்பதிற் சந்தேகமேயில்லை.

ஆதலால், இவ்வரிய பெரிய விஷயங்களடங்கிய இந்நூலை, வடமொழியுணர்ந்தோர் மாத்திரமேயன்றித் தென்மொழியுணர்ந்தோரும் அறிந்து ஆமோதிக்குமாறு, சிற்றறிவுடைய சிறியேன், முதனூலிற் கண்டவாறன்றி இக்காலத்துக் கேற்றவண்ணஞ் சிலவற்றை நீக்கியும் மாற்றியுங் கூட்டியுஞ் சிற்சிலவிடத்தில் முதனூலினுள்ள சுலோகங்களின் பொருள்களை மிகப் பொருத்தமுறத் தமிழ்ப்பாக்களாச் செய்து காட்டியும் என்சத்திக்கு இயன்றவாறு மொழிபெயர்த்தனன்.

இந்நூலை 1903-ம் வருஷத்து யப். எ. பரீட்சைக்குப் பாடமாக ஏற்படுத்திய கனம்பொருந்திய சென்னை யூனிவர்ஸிடியார்பால் பெருநன்றியறிவுடையேனாயிருக்கின்றேன்.

இங்ஙனம்,

பு. மா. ஸ்ரீநிவாசன்.

ஸ்ரீ

கடவுள் துணை.

# போஜராஜ சரித்திரம்.

---

காப்புச்செய்யுள்.

ஒன்றை கடலின் வன்றை கமலப்
பென்றை பகலின் மன்றைப் பிறழுந்
தின்றை வதிதத் தொன்றைத் திருமிசை
ரன்றை வுமேரா னொன்றை துகலேன்.

---

பொங்கிய மங்கள மெங்கணுந் தங்குக.

---

அரசர்க்கரசனாகிய போஜமகாராஜனது சரித்திரஞ் சொல்லப்படுகின்றது:—

முற்காலத்தில், தாராநகரத்தில் சிந்துலனென்னும் மன்னன், சகலங்களைப் பண்புடன் பரிபாலித்துவந்தனன். அவனுக்கு முதியவயதில் போசனென்னும் புத்திரன் பிறந்தனன். அவன் எப்பொழுது ஐந்தாட்டைப்பிராயத்தானாயினனோ அப்போது அவன்றந்தை தான் கிழவனாயிருப்பதை யறிந்து முக்கியமைச்சனாயவுத்தமனைத் துணைக்கொண்டு, தன்றம்பியாகிய முஞ்சன் மிக்கவல்லமை பெற்றவனாயிருத்தலையும் மகன் மிகச்சிறியனாயிருத்தலையு முற்றுமுணர்ந்து பின்வருமாறு சிந்திக்கலாயினன்:—

1

‘எப்போது யான் அரசுநடாத்துந் திறமமைந்த வென்பின்னோனை நீக்கி, அரசாட்சியை பென்மைந்தற்குக் கொடுக்கின்றேனோ அப்போது உலகநிந்தை வரும்; இல்லாவிடின், சிறுகுழந்தையாய என்தநயனை முஞ்சன், இராச்சியவாசைகொண்டு நஞ்சுமுதலியவற்றால் கொல்லினுங் கொல்வன்; அப்போது, கொடுத்தவரசு வீணாவதுமன்றி யகவிழவும் குலநாசமுமாம். ஏனெனில், பாபத்தை நிலைநாட்டுவதும், பாபத்துக்குப் பிறப்பிடமும், பகை சினம் முதலியவைகளை யுண்டுபண்ணுவதும், பாபத்துக்குக் காரணமும் உலோபமே. உலோபத்தால் கோபமும், கோபத்தால் வஞ்சனையும் உண்டாகின்றன; அவ்வஞ்சனையால் நன்னூற்கரைகண்ட நாவலனும் நரகமடைகின்றனன். தாய், தந்தை, பிள்ளை, உடன்பிறந்தோர், நண்பன், யசமானன் ஆகிய இவருள் யாவரையேயாயினும் உலோபவசத்தராய மாந்தர் கொல்லாதுவிடாரன்றோ!’ என்றிப்படி யாலோசித்து அரசை யனுசனுக்குத் தந்து அவன்மடியில் தன்மகன்போசனைக் கிடத்தினன். பின் கிரமமாக இறைவனிறந்தபின் அரசச்செல்வமடைந்த முஞ்சன், முன் முக்கிய மந்திரியாயிருந்த புத்திசாகரனென்போனைக் காரியாங்கத்தால் வெளிப்படுத்தி அவன்றானத்தில் மற்றொருவனை நியமித்து வைத்தனன். போசனைப் பெரியோர்களிடத்துப் படிப்பிக்க அவனும் படித்துவராநின்றனன்.

இப்படிச் சின்னாள் கழிந்துவர, ஓர்நாள் சோதிடக்கடல் கடந்தவனும் எல்லாக்கலையிலும் வல்லவனுமாகிய ஓரந்தணன், அரசனவைக்கு வந்து அவனை யாசிர்வதித்து அவனாணையால் இருந்து, ‘ஓ நிருபனே! என்னை இவ்வுலகத்தோர் எல்லாமறிந்தவனென்று கூறுவர்; அது சிறிது கேட்பீராக; கைவந்த கலையின் சிறத்தாற் பெரியோர் புகழ

2

டைவர்; அஃதில்லாத மூடன் அவமானமடைகுவன்' என,
அவ்வேதியன்சொற் கேட்டுத் தோன்றல், 'யான் பிறந்தது
முதலிதுகாறும் என்னென்ன செய்தனனோ அவையெல்
லாம் உரைப்பீராயின் நீர் எல்லாமறிந்தவரே' என்றான்.
மறையவன், அகத்தும் புறத்தும் அரசனாற் செய்யப்பட்டன
முற்றுந் தவறாதுசொல்ல, இறைவன் கேட்டு ஆநந்தித்து
மறுபடி ஐந்தாறடி தூரம் முற்சென்று அவ்விப்பிரன்காலிற்
பணிந்து, அவனை இந்திரநீலம் மரகதம் மாணிக்கம் வைடூரி
யம்முதலியகூட்டிக் குயிற்றிய ஓராசனத்து இருத்தி, 'கற்பகக்
கொடிபோலுங் கல்வியானது அன்னைபோற் காத்தும், தந்
தைபோல் நன்னெறிக்க ணேவியும், மனைவிபோல் மனத்
துயரகற்றிக் களிக்கச்செய்தும், எண்டிக்கினும் மாசறுபுக
ழையும் ஆசறுதிருவையும் ஆக்கித்தருவதுமன்றி யின்னுமெ
னைத்தானுண்டுபண்ணித் தராது?' என மொழிந்து அவ்வே
தியர்பிரானுக்கு உயர்குலத்துதித்த பத்துப்பரிகள் பரிசளித்
தனன்.

பின்னர்ச் சபையிலிருந்த புத்திசாகரனென்பவன், 'எந்
தலே! போசனது ஜாதகத்தை இவர்க்குக் காட்டும்' என, வே
ந்தன் 'அறிஞனே! போசன்ஜாதகத்தைப் பார்த்துப் பயன்
புகலும்' என்ன, பார்ப்பான் 'பள்ளியினின்றும் போசனை
யழைப்பியும்' என்றுகூற, முஞ்சன் மிக்களிப்போடு தன்
சேவகரையனுப்பிப் பள்ளிக்கலங்காரமாகவிருக்கும் அவனை
யழைப்பிக்க, அவனும் வந்து தன்முறைக்குரிகாலை சி
றப்பனைப் பணிந்து விந[illegible]த்தோடிருந்தனன். தன்வடிவழ
கான் மயக்கிநிற்கும் இராஜகுமாரனண்டையில், பூமிக்கு
வந்த புரந்தரன்போலவும் உடல் பெற்ற வேள்போலவும்
உருக்கொண்ட செல்வம்போலவும் விளங்காநின்ற முகக்

குன்றிய போசனைப் பார்த்துவிட்டு அக்கணி, 'மன்னவனே! இவ்விளங்குமரன்பாக்கியத்தை இயம்பிமுடிக்க நான்முகனுக்குமரிதெனின் ஏழையாய யானெங்ஙனங்கூறுவன்? ஆயினும் என்சிற்றறிவிற் கெட்டியவளவு சொல்வல். இவனைக் கல்விக் கழகத்துக் கனுப்புவிடுமின்' என, அவனும் அவையகுனையாலக்குச் சென்றபின், சோதிடன், 'கொடைத்தேர்மிகுடைய தென்தேயங்களைப் போசன் ஐம்பத்தைந்து வருடம் ஏழுமாதம் மூன்றுநாளளவும் ஆள்வன்' என்ன, ஏந்தல், அது கேட்டு முகவொளியிழந்துவருந்தி அவ்வந்தணனை யனுப்பிவிட்டுத் தனது பளிக்கைச் சூளிகைக்குச் சென்று தனியே ஆலோசிக்கத்தொடங்கினான்.

'என்று இவ்வரசாட்சியை யிவ்விளங்குமர னடைவானோ, அன்று யான் பிழைத்திருப்பினும் இறந்தவனே; ஒருவன், முன்பு செல்வனாயிருந்து பின்பு நல்கூர்ந்தவனாயின் வேறாகவே தோற்றுவன். யாக்கையாசை நீக்கினவனுக்கும், வல்லவனுக்கும், தாளாண்மை யுடையோனுக்கும், அறிவினாலாய்ந்து புரிபவனுக்கும் செய்தற்கரிய தொன்றுமின்று. மிக்கவிரக்க முள்ளவனும், அடிக்கடி யகலாவையமுள்ளவனும், பிறர்பழிப்புக் கஞ்சுபவனுமாகிய இவர்கள் ஒருநாளும் வெறுக்கை பெறார்கள். மேலும், எவன் சிறுமையை முன்னிட்டுப் பெருமையைப் பின்னிட்டு முயன்று சுகமடைகின்றனனோ அவனே அறிஞன்; அவ்வாறு செய்யாதவனே மூடன். பகையையும் பிணியையும் முளையிலேயே களையாதுவிடின் கேடு விளையும். கையிற் குடையுடையான் மழைக்கஞ்சாதவாறுபோலத் தெளிந்த நல்லறிவுடையான் பகைவருக்கஞ்சான்' என்றிங்ஙனமெண்ணியுண்ணாமலே அப்பகலின் மூன்றாமியாமத்தில், வங்கநாட்டுக்கதி

பஞ்ச வற்சராசனென் போனே யழைத்துவரத் தன் பணியாள ரிலொருவனை அனுப்ப, அவனும், விரைவில் வற்சனைக்கிட்டி, 'உம்மை எம் ஆண்டவ ரழைத்துவரக் கட்டளையிட்டார்' என, உடனே அவன், தன் தேரிலிவர்ந்து பரிசனர்புடைசூழப் போ யிறங்கி அவ்விடத்துப் புக்குத் தோன்றலைத் தொழுது அவ னையா விருந்தனன். அரையன், அங்கிருந்தோரியாவரை யும் வெளிப்படுத்தி இவனை நோக்கி, 'மன்னுலகில் மன்னன் மனங்களித்துத் தன் தொழில் புரிவோர்க்கு மானதானமட் டும் பண்ணுகிறான்; அவர்களோவெனின் தமது அடைதற் கரிய ஆவியினையு முதவி புரிகின்றனர். ஆதலால் நீ, என் முன்னோன்மகனை இவ்வூர்க் காளிகோயிற் கொண்டு போய் வெட்டிவிட்டு அவன்தலையை இவ்விரவின் முன்னி யாமத்திலேயே யிங்குக்கொணு' என்றான்.

அவன், எழுந்து பணிந்து 'ஐயனே! நும்மாணையே பிர மாணம்; ஆயினும், ஒன்றுவிக்கையிட வெண்ணுகின்றேன்: அஃது முற்றக்குற்றத்தநாயினும் பொறுத்தருளல்வேண் டும். செல்வம், சேனை, தொழும்பு என்னு மிவற்று ளொன் றுமில்லாச் சிறுகுழந்தையாய போஜனைக் கொல்லக் காரண மென்னை? நித்தியதரித்திரன் நிதி கண்டாற்போல் நும் பாதாம்புயமே கதியெனக்கிடக்குமிவ் வழிவுக் கேற்ற ஏது எளியேனுக்குப் புலப்பட வில்லையே' என்ன, காவலன், சபையினிகழ்ந்த சரித்திர முற்றுங் கூறாது சாற்ற, கேட்ட வற்சன், சிரித்து 'என்னுண்டையீர்! முதுமைக்குங் காவ ராய இராமர், மறைவன் மைந்தர் வசிட்டர் மேற்படுத்த; பெற்ற நன்முகூர்த்தத்தில் அரசாயிருந்து அடவியிற் சென்று மனைவியையும் பறிகொடுத்தனர்; ஆகையால் தவி ஸின்மொழியே தவறிப்போகையில் மற்றெவ்வாற்றுந்தவ

மெய்பெறும்? உலகத்தில் முரண்முடனுறைனுந் தன்னொடு
பன்னாள்தடையறப் பழகியிருக்கின்றவனை வதைக்கத் துணி
வுற்றனே! இவனைக் கொல்லக்கொண்டுபோகின், இறந்தமன்
னற்கினியரும் நுமததிகாரத்தின்கீழ் இருப்பவருமாய சூரர்
கள், முன்பு தேவர்கள் பாற்கடலைக் கலக்கினாற்போல, இப்
பட்டணத்தைக் கலக்குவர்களே! நீர் அநேகநாளா யரசுபுரி
ந்துவரினும் அவர்கள் போசனையே இராசனாக வெண்ணி
வருகின்றார்களே! எண்ணெயோடெரியினும் விளக்கைக்
காற்றணைப்பதுபோல், புண்ணியமிகுதியோ டொழுகினும்
புல்லொழுக்கமுண்டாயின் அது திருவினையழிக்கும்; ஆகை
யால் பிள்ளையைக்கோறல் நல்லிதன்று' என்று புகன்ற
தைச் செவிசடக்கொண்ட புரவலன், சினந்து 'வற்ச! நீ வெந்
தனையன்றி வேலையாளல்லை. யசமானனிட்டவேலை செய்
யாதவடிமை உயிர்த்திருந்து உபயோகமென்ன?' என்றனன்.

பின்னர்க் கன்றின்பெயரோன், காலத்துக்குத்தக்க
கோலங் கொள்ளவேண்டுமென வுன்னிச் சும்மாவிருந்து
இரவிமேற்கடல்குளித்தவளவில் எழுந்து, கண்டோர் கலங்
கித் தத்தமனைக்கேகக் கடுஞ்சினமுண்டகாலனைப்போ விழி
த்துவந்து, தன்னில்லங்காக்கச் சிலரையேவி, தேரைக் காளி
கோயிலுக்கெதிராகத் திருப்பிப் போசகுமாரனது உவாத்தி
யாயரை யழைத்துவர ஒருசேவகனை யேவினான். அவன்
அவரைக்கண்டு 'ஐய! உம்மை வற்சராசரழைக்கின்றார்' என்
ன, அதுகேட்டு அவர், வச்சிரத்தா லடியுண்டவன்போலவும்
பேய்பிடித்தவன் போலவுமாகி, அச்சேவகன்கையைப் பற்
றிக்கொண்டு போய்ச்சேர, அவன் அவரைப் பணிந்து இரு
த்தி 'புலவரே! அரசன்மகன் சயந்தனைப் பள்ளியினின்று
மழைப்பியும்' என்ன, அவ்வண்ணமே யழைப்பிக்க, வந்த

சயந்தனைச் சிறிது பரீக்கைசெய்தனுப்பிவிட்டு, மீண்டும் அவரைநோக்கி, 'போசனை யழைப்பியும்' என்ன, இவை யெல்லாமறிந்த போசன், சினத்தாற் கண்கள் நெருப்புப் பொறி சிதற வந்து, 'ஏட! பாவி! அரசனது முக்கிய குமாரனை யென்னைத் தனியே வெளியிலழைப்பிக்க வுனக் கென்ன திறமை?' எனக்கூறித் தன் இடக்காற்செருப்பால் அவன்கதுப்பிலடிக்க, வற்சன், 'போசனே! நாங்கள் அரசனது கட்டளையை நிறைவேற்றுகின்றவர்கள்' எனச்சொல்லிப் பிள்ளையைத் தேரிலிருக்கவைத்துக் கத்தியை உறையினின்று மெடுத்துப் பிடித்துக்கொண்டு விரைவாய்க் காளி கோயிலுக்குச் சென்றனன்.

பின்னர், 'போசனைக்கொல்ல எடுத்துக்கொண்டு போயினன்' என்னுஞ்சொல், ஊரில் கல்லென்று பரவவே, அங்கிருக்கும் சூரர்கள், என்ன? என்ன? என்று விசாரித்துச் சகலமும் அறிந்துகொண்டு, யானைச்சாலையினும், ஒட்டகச்சாலையினும், குதிரைச்சாலையினும், தேர்ச்சாலையினும் புகுந்து எல்லாவற்றையும் அழித்தனர். வீதிகளிலும், அரசனரண்மனை மதின் மேடைகளிலும், வாயில்வெளியிலுள்ள திண்ணைகளிலும், நகர்ச்சமீபங்களிலும் பேரிகை பறை முரசம் மட்டுகம் முதலிய வாத்தியங்களைச் செவிடுபடும்படி யடித்தனர். சிலர் சிறந்தவாளினாலும், சிலர் பல்லத்தினாலும், சிலர் தோமரத்தினாலும், சிலர் நஞ்சினாலும், சிலர் பிராசாயுதத்தினாலும், சிலர் கட்டியினாலும், சிலர் பரசுவினாலும், சிலர் நெருப்பினாலும், சிலர் நீரினாலுமாக அந்தந் தாசாநகரத்துள்ள அந்தணமாதர்களும், இராஜகுமாரர்களும், இராஜசேவகர்களும், அரசர்களும், இன்னும் பட்டணத்துள்ள மற்றையோர்களும் தத்தம் உயிரை நீத்தனர்.

பின்பு, உலகத்துக்கு அன்னைபோன்றிராநின்ற சாவித்திரியென்னும் பெயரினையுடைய போசன்றாயானவள், தாதியர் மூலமாய்த் தன்மைந்தனது நிலைமையையறிந்து கைகளால் முகத்திலறைந்துகொண்டு கோவெனக் கதறிச் சொல்லுகிறாள்: 'மைந்தனே! சிற்றப்பனால் எக்கதியையடைந்தனையோ! நின்பொருட்டு யான் அநுஷ்டித்துவந்த நியமங்களும், உபவாசங்களும் பயனற்றவையாயினவே! சர்வவல்லமையும், சர்வஞானமுமுடைய தெய்வமே கெடுக்கப்புகின் அதற்கென்செய்யலாம்? ஆ! குழந்தாய்! இந்தத் தொழும்பர்களும், தொழுத்தைகளும் தலையற்று வீழ்ந்திருப்பதைப் பார்' என்றுசொல்லிப் புவியில் வீழ்ந்தாள்.

அதன் பின்னர், எங்குமிருள்மூடியவுடனே வற்சன், காளியின்கோயிலுக்குச் சென்று போசனைப் பார்த்து, 'அரையன்மகனே! சோதிடமறிந்த ஒருத்தன் இனி நீ இவ்விராச்சியம் ஆளப்போகிறாய் என்று சொல்லக் கேட்டு அரசன் உன்னைக் கொல்லக் கட்டளையிட்டனன்' என்ன, அதைச் செவியுற்ற போசன் சொல்வானாயினன்: 'இராமன் காடேற வெழுந்தருளியதையும், பலிசக்கரவர்த்தி பாதலத்திலழுந்தியதையும், பாண்டவர்கள் வனவாசஞ்செய்ததையும், யாதவர்கள் மடிந்ததையும், நளசக்கரவர்த்தி அரசிழந்ததையும், இராவணன் கார்த்தவீரியார்ச்சுனனது சிறைச்சாலையிற் கைப்பட்டிருந்ததையும், அவனே இராமசரத்தாலுயிர்விட்டதையும் ஆராய்ந்து நோக்குங்கால் யாவரும் காலவசப்பட்டிருப்பவரேயன்றித் தப்பியிருப்பவருமுளராவரோ? திருமகள், கௌத்துபம், பாரிசாதம் முதலியவற்றிற்கு உடன்பிறந்தவனும், பாற்கடற்கு மைந்தனும், கருணைக்கடலாய சாளகண்டனால் தலையிற்றாங்கப்பெற்றவனுமாய் விளங்குஞ் சந்திரனும்,

தெய்வத்தா லேற்படுத்தப்பெற்ற தேய்வை இன்றும்விடுகின்றிலனெனின், மற்றெவன்றான் கல்லெழுத்துக்குறிகளாய விதியின் கதியைக் கடக்கவல்லன்? கடுங்கானத்திரிதலும், மலையேறுதலும், வெற்றுத்தீவடைதலும், விலங்குறுதலும், குகையுட்புகுதலும் ஆகிய இவை யாவும் விதியின் விரிவேயன்றி வேறல்ல. எவனது இச்சையால், கடல் தரையாகவும், தரை கடலாகவும், தூகட்குவை மேருவாகவும், மேரு தூகளாகவும், புல் வச்சிரமாகவும், வச்சிரம் புல்லாகவும், நெருப்பு நீராகவும், நீர் நெருப்பாகவும் ஆகப்பெறுகின்றனவோ அத்தகைய கடவுளுக்கு வந்தனம்' என்று புகன்று, இரண்டு ஆலிலைகொணர்ந்து அவற்றுள் ஒன்றை ஓர்கல்லையாகத் தைத்துத் தன்முழந்தாளைக் கத்தியினறுத்தி, அத்தச்செந்நீரையக் கல்லையிலேற்றுப் புல்லினுனியினால்மற்றோரிலையில் ஓர்கவி எழுதி, வற்சனைப் பார்த்து 'ஓ! பெரியவரே! அருள்செய்து இவ்விலையை யரசன்கையில் கொடும். இனி, அரசன்கட்டளையை நிறைவேற்றும்' என்ன, பின் அவரோடு அங்குவந்திருந்த வற்சராசனது தம்பியானவன், உயிர்விடத் துணிந்திருந்தும் சமயத்திலும் பொலிவுற்றமுகத்தோடும் கண்ணுக்கினியனுமாகவிருக்கும் போசகுமாரனை அளியுடன்கண்டு, அன்னவனை நோக்கிக் கூறுகின்றான்: 'இந்நிலவுலகத்தில் இறந்தமாந்தர்க்குத் துணையாகச் செல்லவல்லது அறமொன்றேயன்றி அன்னை மனைவி மக்கள் நண்பன் தாயத்தோர் முதலியவர் துணைவராகச் செல்லார்; எவன் அறநெறியை யறியவில்லையோ, அவன் வல்லவனாயினும் வலியற்றவனே; செல்வத்தோனாயினும் வறியவனே; கல்விகற்றோனாயினும் கல்லாதவனே; நோயைநீக்கும் மருந்துள்ள இங்கேயே தன் நரை திரை மூப்பு ஆகிய நோயினைத் தீர்த்துக்கொள்ளாத நோயாளி, மருந்

தில்லாத அவ்விடத்திற் சென்று என்செய்வான்? நினக்கு, சரியாய குலம், பருவம், உருவம் முதலிய உடையோரநேகர் இறக்கக் கண்டிருந்தும் அச்சஞ்சிறிது முண்டாகவில்லை; ஆகலால், நின்னெஞ்சு கல்லே' என்ன, கேட்டவற்சன், வைராக்கிய மடைந்து, போசனை 'பொறுத்துக்கொள்' என்று பணிந்து, அந்நள்ளிருளிலேயே நகர்வெளியிலுள்ள மனைக்கு அவனுடன் சென்று, போசகுமாரனைச் சுரங்கத்தில் வைத்துவிட்டுத் தான்விரைவாய்க் கிருத்திரிமவித்தைவல்லவர்களிடம்போய், அவர்களைக்கொண்டு குண்டலத்தோடும், பொலிவுற்றமுகத்தோடும், மூடியகண்ணோடுங் கூடிய போசகுமாரன்றலையொன்று செய்வித்து அதை எடுத்துக்கொண்டு தன் தம்பியோடுங்கூட அரசனரண்மனைக்குச் சென்று, மன்னனைப் பணிந்து 'சுவாமிகட்டளை நிறைவேற்றப்பட்டது' என, வேந்தன், மைந்தனிறந்தமையறிந்து வற்சனை நோக்கி 'வாள்வெட்டுச்சமயத்தில் அவனென்னசொன்னான்?' என, வற்சன் 'ஆண்டவரே! நமக்கு இவ்விலையுள் என்னவோ எழுதியிருக்கின்றது; அதை யெடுத்துக்கொள்ளும்; தலையையும் பாரும்' என்ன, அரசன், அவ்வகைத்தாய போசகுமாரனது தலையைப் பார்த்து மெல்ல அழுது 'இம்மத்தகத்தை எங்கேனும் புதைத்துவிடு' என்றனன்.

வற்சன் போனபின்பு, வேந்தன், தேவியைக்கூவிக் கைவிளக்குக்கொண்டுவரச்சொல்லி, அந்த ஆலிலையில் செங்நீரா லெழுதப் பெற்றுள்ள எழுத்துக்களை வாசிக்கத் தொடங்க, அதில்,

"மன்னுபுகழ் பெற்றுமுதல் யுகத்திலார்ந்த
மாந்தாதா வெங்கலைநீர்க் கடல டைத்துத்

தென்னிலங்கை மேவியிரா வணனைச் செற்ற
தேர்க்கதிரோன் குலத்திலங்கி ராம னெங்கே
இன்னுமிகற் பாண்டவரே முதல யாரு
மெய்தினரவ் விண்ணுலக மிறந்து மன்னோ
அன்னவரோ டிவ்வவனி சென்ற தில்லை
யாயினுமிஃ துன்னுடனே போது மெய்யே"

என்றிருப்ப, அதனுட்பொருளை யுய்த்துணர்ந்துகொண்டு, படுக்கையினின்றுங் கீழ்வீழ்ந்து மூர்ச்சை யடைந்தான். பின், தன் நாயகி செய்த உபசாரத்தினால் மூர்ச்சை தெளிந் தெழுந்திருந்து, 'என்காதலியே! நீ, என்னைத் தொடேல்; யான் மைந்தனைக்கொன்ற மாபாவியன்றோ!' என்று புகன்று அழுகுரற்பட்சிபோலழுது, வாயில்காப்போரைப்பார்த்து, 'நீவிர் அந்தணர்களை அதிசீக்கிர மழைத்துவாருங்கள்' என்றவளவில், உடனே தன்னாணையின்படி யெழுந்தருளிய மறையவர்களைப் பணிந்து, 'யான் நெஞ்சறியப் பிள்ளையைக் கொன்றேன்; அதற்குப் பிராயச்சித்தமேதேனு முளதேற் சொல்லுமின்'என்ன, அவர்கள் 'அரசனே! கனமுந் தாமதியாமல் வானுறவளர்ந்தோங்கியெரியுநெருப்பில் வீழ்ந்து, உயிர்துறத்தலே அதற்குத் தக்க பிராயச்சித்தம்' என்றனர். அதன்மேல், புத்திசாகரனென்னும் பழையமந்திரி, வேந்தனை நோக்கி 'நீ எங்ஙனம் அரசரிற் கடையானவனோ அங்ஙனம் அமைச்சரிற்கடையானவன் வற்சனே. சிந்துலமகாராசா நினக்கு அரசாட்சி தந்து நின்மடிமீது போசகுமாரனை விட்டிருப்ப, அதைச் சிறப்பனுகிய நீ வெறுக்கினை. மேலும் சிலநாளைக்கிருப்பதும் மதத்தையே யுண்டாக்குவதுமாகி யுள்ள யௌவனத்திலே, கொடியவர்கள், எப்படித் தம்பிறப்புப் பயனற்றதாகுமோ அப்படிப்பட்ட அபராதங்களைச்

செய்துகொள்ளுகிறார்கள். தினையளவு நன்றி செய்யினும் சான்றோர் அதைப் பனையளவாக நினைக்கின்றார்கள். அரிய உயிரால் உதவிபுரிந்தாலும் மூடர்கள் அதைப் பெரும்பகை யாகவே எண்ணுகின்றார்கள். ஒருவன்செய்த உபகாரத்தைப் பெறவும், அபகாரத்தையேனும் எவன் தன் நெஞ்சார நினைக்கின்றிலனோ, தன்னெஞ்சினாலும் அவன் பிழைத்திருந்து பெறும்பயனென்? பொன், தானியம், இரத்தினம், பணம் முதலிய யாவும் மக்களிடத்திருந்தே அரசர்களுக்கு வருகின்றன. மக்களோ, அரசன் அறநெறி நிற்பனாயின் அவ்வறநெறியிலே நிற்பவரும், அவன் மறநெறி நிற்பனாயின் அம்மறநெறியிலே நிற்பவருமாகி, அரையனையே அநுசரித்துவருகின்றார்கள். ஆகையால் அரசன் எவ்வழியோ மக்களும் அவ்வழியே' என்றனன்.

அதன் பிறகு, அம்முஞ்சன், அவ்விரவிலேயே அக்கினிப்பிரவேசஞ்செய்ய நிச்சயித்திருக்கையில், அவனருகிலுள்ளவர்களும் அப்பட்டணத்துள்ளவர்களுமாய யாவரும் அங்கு ஒன்றுசேர்ந்தனர். மனமறிய மகனைக் கொன்ற பாவத்துக்குப் பயந்து மன்னவன் நெருப்பில் விழப்போகின்றானென்னுஞ் சொல் எங்குமோடிப் பரவிற்று. அதன் மேல், புத்திசாகரன், கடைகாப்பாளரை யழைத்து, 'ஒருவரையும் அரையனரண்மனைக்குட் புகவிடாதிர்' எனக் கட்டளையிட்டு, வேந்தனை அந்தப்புரத்திலிருக்கச்செய்து தானொருவனாகவே சபாமண்டபத்திலிருக்கையில், மன்னன் மரணவார்த்தையைக்கேட்ட வற்சன், விரைந்தோடிவந்து வேந்தன்மனையிற் புக்குச் சபாமண்டபத்துத் தனியே யிருக்கும் புத்திசாகரனைத் தொழுது, 'யான் போசகுமாரனைத் தீங்கின்றிக் காப்பாற்றி வைத்திருக்கின்றேன்' என்று

மெல்லச் சொல்லவே, புத்திசாகரனும், உடனே அவன் காதில் ஒன்று கூறினான். அதைக் கேட்டுக்கொண்டு அவன் போய் விட்ட முகூர்த்தநாழிகைக்குள், கையிற் றண்டத்தடி பிடித்தவனும், செந்நிறச்சடையுடையவனும், கர்ப்பூரஞ்சேர்ந்த திருநீற்றுப் பூசப்பெற்ற எல்லா அவயவங்களையுடையவனும், உடல்பெற்றமீனகேதனன்போன்றவனும், படிகக்கற்குண்டலந் திகழ்ந்தசையு மிருகாதினையுடையவனும், வெண்பட்டுக் கோவணமுடையவனும், மானுடவுருவங்கொண்ட மகேச்சுரனுக்கு நிகரானவனுமாய் விளங்காநின்ற ஓர் சன்னியாசி சபைக்குவந்தான். புத்திசாகரன், அவனைப்பார்த்து, 'துறவியே! எங்கிருந்து வருகின்றீர்? இருப்பிடமெது? எவ்வித்தையில் வல்லமையுடையீர்?' என்று வினயத்தோடு கேட்ப, அந்நீத்தோன், 'மெய்ப்பொருளையறிந்தவர்கட்கு இத்தேசங்கடோறும் வீடுகளும், வீதிகடோறும் இரப்பன்னமும், குளத்திலும் ஆற்றிலும் தண்ணீரும் தன்னடையே யிருக்கின்றன. ஊர்கடோறும் குடிலும், அருவிகடோறும் தீர்த்தமும், பிச்சையெடுப்பதால் சோறும் எளிதிற்கிடைக்கையில் சகலபாவங்களுக்குங் காரணமாய சம்பத்தினால் யாது பயன்? ஆகையால், எமக்கென்று ஓர் நாடில்லை; எல்லாப்புவியிலும் திரிந்துவருகின்றோம்; ஆசிரியன் உபதேசித்தவண்ணம் நடக்கின்றோம்; உலகத்துள்ள எல்லாப்பொருள்களையும் அங்கைநெல்லிக்கனிபோற் காண்கின்றோம்; பாம்புகடித்திறந்தோர்கள், விடத்தினாற் பீடிக்கப்பட்டோர்கள், நோயினா லிறந்தோர்கள், வாளாலறுப்புண்ட சிரமுடையோர்கள் ஆகிய இத்திறத்தோர்களின் நோவைப் போக்கி அவர்களை முன்னிருந்தவாறே செய்யவும் வல்லேலாய்' என்றான்.

மகிபனும், சுவர்க்குள்ளிருந்தவாறே, துறவிகூறிய எல்லாவற்றையும் செவியேற்றுச் சபைக்குவந்து, அத்துறவியைப் பணிந்து எழுந்து கைகட்டி வாய்பொத்திக்கொண்டு அவர்க்கெதிரேநின்று, 'ஓ! நீத்தோர்களுக்கதிபரே! பெரியோரே! பிறர்க்குதவியே பெருந்தொழிலாக் கொண்ட பேரருளாளரே! பெரும்பாவியாய யான் வாளால் வெட்டிக்கொன்ற என்மைந்தனுக்கு உயிர்தந்து என்னைக் காத்தருளும், காத்தருளும்' என்று பலவாறு வேண்டாநிற்கையில், அச்சன்னியாசி, 'தோன்றலே! அஞ்சேல், அஞ்சேல்; நினது புதல்வன் சாகான்; கடவுளருளால் உயிர்த்து வீட்டுக்கு வருவன். ஆனால், புத்திசாகரனென்பவனோடு ஓமஞ்செய்தற்குரிய வத்துக்களைப் புறங்காட்டுக்கு அனுப்பு' என்ன, வேந்தல், அத்துறந்தோன்மொழிப்படியே அப்பொருள்களையும், அவ்வமைச்சனையு மனுப்பினன்.

அதன்பின்பு போசகுமாரனும், மறைந்தவுருவத்தினனாய் அவ்வூர் ஆற்றங்கரையிலுள்ள நன்காட்டுக்கு வந்து சேர்ந்தான். சிலநாழிகைக்குப்பின், யோகப்பயிற்சியுள்ள துறவியால் அரசன்மகன் பிழைத்தெழுந்தானென்னுஞ் சொல் நகரெங்கும் பரவிக்கொண்டே நிற்கையில், போசகுமாரன், நல்விலக்கணமமைந்துள்ள அரசயானையின்மிசை யேறிக்கொண்டு,வந்திகள் துதிசெய்யவும்,பேரிகை முதலிய வாத்தியங்கள் உலகெங்கும் செவிடுபடும்படி யொலிக்கவும், அந்தணர்கள் அருமறைமொழியோ டாசீர்வதிக்கவும், அப்பட்டணத்தவர்களும், அமைச்சர்களும் இடையறாது நாற்புறமுஞ் சூழ்ந்து துதிக்கவும், உதயகிரிமீது ஒளிரும் இளஞாயிறுபோல் மிக்க கோலாகலத்தோடு வைகறைப் பொழுதில் அரசன்மாளிகையுட் புகுந்தனன். மன்னவனும்,

மகனைக்கண்டு உடன்மறந்த வுவப்பினனாய்க் கட்டிக்கொ
ண்டு அழ, இளஞ்சிங்கம்போன்ற போசனும், அவனை யழ
வொட்டாமற் றடுத்துப் பலவாறு புகழ்ந்தனன். மன்னனோ,
உடனே தன் சிங்காதனத்தில் அவனையிருத்தி இராச்சியபட்
டாபிஷேகஞ் செய்வித்து, தன்பிள்ளைகளுக்கும் தனித்தனி
ஒவ்வொருநாடு கொடுத்துத் தனக்கு மிகவு மிஷ்டனாகிய சய
ந்தனை அவனது மடியில் விட்டான். பிறகு முஞ்சன், தன்
பட்டமகிஷிகளோடு காட்டகத்துச்சென்று தன்னுயிர்க்குறு
தியாகிய தவத்தைச் செய்துகொண்டிருந்து பரலோகமடைந்
தனன். போசனோ தேவேசனது கடாட்சத்தினாலும் அந்த
ணர்களி னாசீர்வாதத்தினாலும் அரசுநடாத்த யத்தனித்து,
முன் முக்கியமந்திரியாயிருந்த புத்திசாகரனென்பவனை மீண்
டும் முக்கியமந்திரியாக்கி, தனது குடைக்கீழுள்ள உலகெ
ல்லாம் களிகூர்ந்து துதிக்கும்வண்ணம் நற்செங்கோல் நடா
த்திவந்தான்.

இவ்வாறு சிலநாள் கழிந்தபின், ஒருநாள், அரசன்
விளையாட்டுக்காகச் சோலைக்குப் போய்க்கொண்டிருக்கை
யில், அத்தாராநகரவாசியாகிய ஒரந்தணனைக் கண்டான்
அவனும் இவனைப்பார்த்துத் தன்கண்ணைமூடிக்கொள்ள,மன்
னன் 'ஓ! மறையவரே! நீர் என்னைப்பார்த்து ஆசீர்வாதஞ்
செய்யாமலும்,கண்களை மூடிக்கொண்டும் நிற்கக் காரணமெ
ன்னை?' என, பூசுரன் 'ஆண்டவரே! நீர் வைணவரே; பார்ப்
பனர்களுக்கு ஒரு பொல்லாங்குஞ் செய்கின்றிலிர் ஆகை
யால், நும்மிடத்தி லெனக்கு அச்சஞ் சிறிதுமில்லை. ஆயி
னும் ஒருவருக்கும் ஒன்றுங் கருதிலிர். அதனால் உமது
தாட்சிணியம் எனக்கு வேண்டுவதொன்றன்று. நீராசீர்
வாதத்தினா லென்னபயன்? மேலும், 'காலைப்பொழுதிலே

யே, கொடாதவன் முகத்திலிழித்தால் மற்றோரிடத்திலும் பயன்கிட்டாது' என்னும் பழமொழியிருப்பதால் கண்ணை மூடிக்கொண்டேன். அன்றியும், எவ்வரசனுடைய கோபமும் அருளும் பயனற்றனவாகின்றனவோ, அத்தகைய அரசனை ஒருவருஞ்சேரார். அவையில் மெய்ந்நடுங்குவோனது கல்வியும், கொடாதவனது செல்வமும், போர்க்கஞ்சுவோனது வல்லமையும் உலகத்துள்பயனற்றனவேயாம். அரசனே! என்தந்தைகிழவர்; அவர்காசியாத்திரைபோகவிருக்கையில், செய்ய வேண்டியதென்னவென்று யான் அவரைக் கேட்க, அவர், "அமைச்சர் சொல்லைக் கேட்பவனும், விடர்கள் வார்த்தையை நம்புபவனும், மாதர்கள் வயத்தனாயிருப்பவனும் ஆகிய அரசனைக் கனவிலும் சேரேல். மகாபாவியருள் இருவரே சிறந்தவராவர்; அவர்கள் யாரெனின், கெட்டவமைச்சனுடைய அரசனும், அவனைச் சேர்ந்திருப்பவனும். நற்குணமிகுந்த அமைச்சர்சொல்லை எறிந்துவிட்டு, மூர்க்கர்மொழியையே கேட்டுநடக்கும் அவிவேக வரசனிடத்தில் எங்ஙனம் நல்லோர் சேர்வர்? நற்குண நிறைந்த அரசன் நல்கூர்ந்தவனாயினும் அனுசரிக்கத்தக்கவனே; ஏனெனில், அப்போது பயனுண்டாகாவிடினும் பின்னர் உண்டாகும். கொடாதவனது ராட்சியம் விரும்பத்தகுவதன்று" என்றனர். முன்னிருந்த கன்னன் ததீசி விக்கிரமன் முதலிய மன்னர்கள் இறந்து பரலோகமடைந்திருந்தும், தாந்தாஞ் செய்துகொண்டுவந்த கொடைப்பெருக்கத்தாலுண்டாய குணங்களினால் எங்ஙனம் இவ்வுலகத்தில் இன்றளவும் வசித்துக்கொண்டிருக்கின்றனர்களோ, அங்ஙனம் இந்நாளரசர்கள் இருக்கின்றனர்களா? அழியுந்தன்மைத்தாய உடலுக்குக்காப்புச்செய்யாமல் அழியாதபுகழையேகாக்கவேண்டும்.

மனிதன் தன்பூதவுடம்பழிந்து இறந்தும் புகழுடம்பாற் சீவித்திருக்கின்றனனே! புலவன் மூர்க்கன், வலியான் எளியான், செல்வன் தரித்திரன் ஆகிய இன்னோர்பக்கல் இயமன் சமமாகவே நடந்துகொள்ளுகிறான். ஆயுளோ கணப்பொழுதும்நில்லாது குறைந்துகொண்டேவரும். ஆகையால், நிலையில்லாத உடல் இருக்கும்போதே நிலையுள்ள புகழொன்றினைத் தேடவேண்டும். கொடுத்தல் அநுபவித்தல் முதலியன இல்லாத வாழ்வினைப் பெரியோர் வாழ்வென்றே நினையார்' என, அரசனும், அவ்வாக்கியத்தினால் அமுதக்கடலுள் மூழ்கினவன்போலவும், பிரமாநந்தத்துள் ஆழ்ந்தவன்போலவும் ஆகி, கண்களில் ஆநந்தநீர் பெருக அம்மறையவனைப் பார்த்து, 'கேளும்; அந்தணர்க்கதிபரே! உலகத்தில், எப்பொழுதும் இனியனவற்றையே சொல்லும் மனிதர் எளியர்; பிரியமற்றதாகும் உண்மையுள்ளதுமாய பேச்சைச் சொல்வோரும் கேட்போரும் அரியர்; அறிவுடையோர்கள் இதத்தை வேண்டுபவர்களையும், இதத்தை வேண்டுபவர்கள் அறிவுடையோர்களையும் இரார்களன்றோ! புலமையும் கண்பாணையுமுள்ள மனிதன், மநுசரும் இதமும் வாய்ந்த மருந்து போல் அரியனே' என்று கூறி அவனுக்கு இலட்சம் பொன் கொடுத்து, 'அந்தண! நின்பெயரென்னை?' என, அவனும் தன்பெயர் கோவிந்தனென்று பூமியில் எழுத, அரையன் அதை வாசித்துக்கொண்டு, 'வேதியரே! நாடோறும் நீர் அரண்மனைக்கு வந்துகொண்டிருக்கவேண்டும். உமக்கு ஒரு தடையுமில்லை. புலவர்களும், கவிகளும் அவைக்கு அழைத்துக் கொண்டுவரத் தக்கவர்களே; பெரும்புலவர்களில் ஒருவரும் துன்பமுறத்தக்கவரல்லர்; ஆக நடத்திக்கொண்டு வருமிவ்வதிகாரத்தை நீரே பரிபாலித்துக்கொண்டுவருக' என்று சொன்னான்.

இவ்வாறு சிலநாள் கழிந்துவருகையில், அரசன் 'புலவர்களிடத்தில் அன்புள்ளவன், கொடைச்செல்வன்' என்னும் புகழ் பெற்றான். பின்பு வேந்தனைக் காணற்பொருட்டுக் கவிகள் வெவ்வேறு திசைகளினின்றும் வந்துகொண்டிருந்தார்கள். இவ்வழியாகச் செல்வச்செலவு செய்துவரும் அரசனைநோக்கி ஒருநாள் முக்கியமந்திரியானவன், 'தேவ! கோசபலமுள்ள மன்னவர்கள் வெற்றியுடையவர்களே யன்றி மற்றையவர்க ளல்லர். சிறந்த யானைப்படை நிறைந்த நாட்டினன் எவனோ அவன் வெற்றியுடையான்; கோசமுடையான் எவனோ அவன் பொருதற்கரியவன்; அரணுடையான் எவனோ அவன் வெல்லுதற்கரியவன். தேவனே! இவ்வுலகத்தைப் பாரும்; வில்லானது இரண்டுகோடிகளை யுடைத்தாயிருந்தும் ஒரிலக்கத்திற்காக எவ்வளவு வணங்குகின்றது! ஆகையால், பெரும்பாலும் செல்வமுடையோர்களுக்கே செல்வத்தில் மென்மேலும் ஆசை' என்ன, வேந்தன், அவனைநோக்கி, 'எந்தப்பொருள் கொடுத்தல் அனுபவித்தலின்றி நண்பர்களுக்கும் பயன்படவில்லையோ, அந்தப்பொருள் முறையே அழிவுபெறும்' என்று கூறி, அவ்வமைச்சனை அவ்வேலையினின்றும்நீக்கி, அவனிடத்தில் வேறொருவனை நியமித்து அவனைப்பார்த்து, 'மகாகவிக்கு இலட்சமும், புலவனுக்கு அதிற்பாதியும், அரைப்புலவனுக்கு ஐஞூறும், காற்புலவனுக்கு அரையூறும் கொடுக்கவேண்டும். என்மந்திரிகளுள் எவனுக்குக் கொடுக்க மனமில்லையோ அவன் கொல்லத்தக்கவனே. எது கொடுத்தற்கும் உண்டற்கும் உபயோகப்படுகின்றதோ, அதுதான் தனமுடையோர்களின் தனம். அஃதில்லாத பிணம்போன்றவர்களின் பொருள்களினுல் மற்றையோர்கள் சந்தோஷிக்

கின்றனர்கள். உலகத்தோர், மேகத்தையேயன்றிக் கடலை விரும்பாதவாறுபோல், கொடுப்பவனையேயன்றிச் செல்வத்தோனை விரும்பார். கொள்ளுங்குணமே யமைந்துள்ள சமுத்திரம் பாதலத்தி லாழ்ந்துகிடக்கின்றது; கொடுக்குங் குணமுள்ள மேகமோ வானத்தின்மேற் கர்ச்சித்துக்கொண்டிருக்கின்றது; பார்' என்றனன்.

இங்ஙனம் போசராசன் கொடையிற் சிறந்தவனெனக் கேட்டு, களிங்கதேசத்தோனாகிய ஓர்கவி, அங்குவந்து மூன்று மாதமளவு காத்துக்கொண்டிருந்தும் அவனுக்கு இராஜதரிசனங் கிடைக்கவில்லை; உணவோ குதிரைக்கொம்பாய்விட்டது. பிறகு, ஓர்நாள், மன்னன் வேட்டையாட வெண்ணிப் புறப்பட்டான். அப்போது அக்கவி, தோன்றலை நோக்கி, "போசராசேந்திரனைக் கண்டபோழ்தே பகைவனதாயுதம், கவியின்வறுமை ஆகிய இவை உடனே நழுவுகின்றன" என்னுங் கருத்தமைந்த செய்யுளைச் சொல்ல, வேந்தன் இலட்சந் தந்தனன். அதன்பின்னர், அந்நரபதி, வேட்டைமேல் விருப்பமுற்றிருக்கையில், ஓர் வேடப்பிள்ளை பாட, அப்பாட்டினினிமையாற் களிப்புற்ற ஏந்தல், அப்புளிந்தகுமாரனுக்கு ஐந்திலட்சங் கொடுத்தனன். அப்போழ்து கவியானவன், அக்கொடை மிகச்சிறந்திருப்பதையும், பாடுவோன் வேடனாயிருப்பதையுங் கண்டு, அரசன்கையிலுள்ள தாமரை வியாசமாக நரேந்திரனைக்குறித்து, "ஓ! தாமரையே! திருமகளிருக்கு மிடமாய நினது கோசம், மதுபர்களாலுண்ணப்படுகின்றது; அதனால், நினது குணங்கள் நற்குணங்களாயிருந்தும் பிரகாசத்தை அடைகின்றில' என்னுந்தாற்பரியமமைந்த பாட்டைக் கூறினன். போசன், அவனது எண்ணத்தை யறிந்துகொண்டு, மறுபடியும் இலட்சங் கொடுத்

தான். மீண்டும் அவ்விப்பிரனைப்பார்த்து 'அந்தண! பிரபுக்களால் நன்குமதிக்கப்படுவது கலையேயன்றிக் குலமுடைமையன்று; தேவர்களனேக ரிருக்கச்செய்தேயும் கலாவானாகிய சந்திரனொருவனேயன்றோ சங்கரபகவானாற் றலையில் தரிக்கப்படுகின்றான்' என்றிங்ஙனம் அரசன் சொல்லிக்கொண்டே யிருக்கையில், எங்கிருந்தோ ஆறுகவிகள் வந்தார்கள். அவர்களைப் பார்த்து இராசா, இப்பொழுதே இவ்வளவு பொருள் செலவழிந்ததேதென்று முகங்கடுத்தவனாயிருந்தான். பின்பு கவி, அவ்வபிப்பிராயத்தை யறிந்து மீண்டும் நரபதியைக்குறித்துப்பங்கசவியாசமாக "ஓ முண்டகமே! ஏன் கோபிக்கின்றாய்? யார்மீது கோபிக்கின்றாய்? இதழ்களோறும் வண்டுகளால் தேடப்படுதற்குரித்தாய நின்னது புதியமணமுள்ள தேனின்மேலே அக்கோபத்தைக் காட்டு" என்னும் பொருளமைந்த செய்யுளைக் கூற, அதனால், மன்னவன் தெளிந்தமுகத்தினனாயிருக்கக் கண்ணுற்று, 'உலோபியானவன், தன்பொருளைக் கொடுக்கவும் அனுபவிக்கவும் மாட்டாமல் தொட்டுப்பார்க்கின்றான். எவன், இரப்போர் கேட்கும்போதே களித்தும் கொடுத்தபின்பு விருப்பமுள்ளவனாயு மிருக்கின்றனனோ, அவனைப் பார்த்தவனுங் கேட்டவனுந் துறக்கமடைகுவன்' என்று விளக்கமாகச் சொல்ல, அவனால், சந்தோஷித்துக் களிங்கதேசத்துக்கவிக்குத் திரும்பவும் இலட்சந்தந்தான். பின்னர், முன் கவியானவன், எதிரிலிருக்கும் ஆறுகவீந்திரர்களை நோக்கி, 'ஓ! கவிகளே! இப்பெரிய குளக்கரையிலிருக்கும் பூபதி, எப்பொழுதரண்மனைக்குப் போகுவனோ அப்போது ஏதாவதுசொல்லுங்கள்' என்ன, அரசனது முற்செய்கையை அறிந்திருந்த அம்மகாகவிகளுள் ஒருவன், தடாகவியாசமாகக்

கொற்றவனை யுத்தேசித்து, "எந்தக்குளத்தின் வழியில் நிறைவின்றிவருகின்றனவும் நிலைறவுற்று நீங்காதனவுமாகிய குடங்களின் இடிபாடு இல்லையோ, அதுதான் சிறந்த குளம்" என்னுந் தாற்பரியங்கொண்ட பாட்டினைச் சொல்ல, அவற்கு இறைவன் இலட்சங் கொடுத்தான். பின்பு, கோவிந்தபண்டிதன், அந்தக்கவிந்திரர்களைக் கோபித்துக்கொண்டான். அவனது கோபாபிப்பிராயத்தை அறிந்து இரண்டாங்கவி "நல்வழியினுள்ள சிறந்த குளமே! முதலை மிகக்கோபங்கொள்ளாநிருக்குமாயின், நீ எவரது தாகத்தைத்தான் போக்குகின்றிலை? உன்னையிழிந்து எவர்தாம் நினது நீரைக்குடிக்கின்றிலர்?" என்னுங் கருத்துள்ளபாட்டைக் கூற, இராசன் அவற்கு இரண்டிலட்சம் அளித்தனன். அக்கோவிந்தபண்டிதனை அவ்வதிகாரபதவியினின்றும் நீக்கிவிட்டு, அவனைப் பார்த்து, 'நீரும் சபைக்கு வந்துகொண்டிருக்கவேண்டும். ஆனால், ஒருவருக்குங் கொடுமைசெய்யவொண்ணாது' என்று சொல்லிப் பின் அவர்களுள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே இலட்சங் கொடுத்துவிட்டுத் தன்பட்டணம்போய்ச் சேர்ந்தான். அவர்களும் வந்தவழிச்சென்றனர்கள்.

ஓர்நாள் கொற்றவன், முக்கியமந்திரியை யழைத்து, 'எவனொருவன் அந்தணனாயினும் மூடனாயிருக்கின்றானோ அவன் எனது நகரத்திலிருக்கத்தக்கவனல்லன்; எவனொருவன் குயவனாயினும் புலவனாயிருக்கின்றானோ அவன் என்பட்டணத்துள் இருக்கத்தக்கவனே' என்ன, அதனால், தாராநகரத்தில் ஒருவனும் மூடனாயிருக்கவேயில்லை. அதன்பின்பு, முறையே வந்தவர்களும், எல்லாக்கலைகளிலும் வல்லவர்களும், எல்லாமறிந்தவர்களு மாகிய வரருசி பாணன் மயூரன் ரேபணன் அரிசங்கரன் கலிங்கபூரன் விஜயகன் மதனன்

வித்தியாவிநோதன் கோகிலன் தாரேந்திரன் முதலான ஐஞ்ஞூறு கவிஞர்கள், போசராசனது சபையை யலங்கரித்துக்கொண்டிருந்தனர்கள். கவிகளுட் சிறந்தவனாய், கவனத்தி லினிமைபூண்டவனாய், வேதியர்க் கினியசுற்றத்தோனாய் விளங்கும் போசராசன், புலவர்கூட்டஞ் சூழச் சிங்காதனத்தில் வீற்றிருக்குநாளில் ஓர்நாள், வாயில்காப்போன், வந்துபணிந்து, 'தேவனே! ஓர்புலவன் வாயிற்புறத்துக் காத்துக்கொண்டிருக்கின்றான்' என்ன, வேந்தன் 'அவனை உள்ளே விட்டிடு' என்ன, அவ்வாறு கட்டளைபெற்ற அவனும், வலக்கையை உயரத்தூக்கிக்கொண்டு, 'நிருபனே! மங்களமுண்டாகுக' என, அரசன், 'சங்கரகவியே! இப்பத்திரிகையில் என்ன?' என, சங்க: 'பாட்டு' என்ன, அரச: 'யாருடையது?' என, சங்க: 'போசராசனே! நின்னுடையதே' என, அரச: 'படியும்' என, சங்காகவி, 'சாமரை வீசிக்கொண்டிருக்கும் அழகிய தாமரை நிகர்த்த கண்ணுடைய இம்மாதர்கள் தங்கள்கைகளிலணிந்துகொண்டிருக்கும் வளையல்களின்ஒலியை நொடிப்பொழுது நிறுத்து' எனக் கூறி, "போசனே! மூன்றுலகங்களையும் வெளுப்பாகச் செய்வதற்கு யத்தனித்ததுபோல் எவ்வாறெவ்வாறு நினது புகழ் வளர்ந்துகொண்டே வருகின்றதோ, அவ்வாறவ்வாறே என் மனையாளினது அளகம் விளர்த்துக்கொண்டே வருமென்றும் ஐயத்தினால் நெஞ்சம் அயர்ந்துகொண்டே வருகின்றது" என்னும் அபிப்பிராயம் வாய்ந்த செய்யுளைச் சொன்னான். அரசன் சங்கரகவிக்குப் பன்னிரண்டிலட்சந் தந்தனன். அதனால், எல்லாப்புலவர்களும் முகவொளியிழந்தவர்களா யிருந்தும், ராஜபயத்தா லொருவரும் ஒன்றுஞ் சொல்லவில்லை. மன்னனுங் காரியவசத்தால் அந்தப்புரத்துட்

சென்றான். பின்பு, சபையில் அரச னில்லாதிருக்கக்கண்டு
புலவர்களெல்லோரும், 'அஹோ! அரசனுக்கு என்ன அறியா
மை? இவனைச் சேவித்துக்கொண்டிருப்பதால் யாது பயன்?
தன்னை யடுத்த வேதசாத்திரமறிந் திருக்குங் கவிகளுக்கோ
இலட்சங் கொடுத்தான்; இவன் சந்தோஷித்து ஆவதெ
ன்ன? இச்சங்கரகவியோ கேவலம் நாட்டுப்புறத்தான்
இவன் புலமைதான் எவ்வளவு?' என்றிங்ஙனம் நிந்தித்த
தால் பேரரவ முண்டாயிற்று.

அச்சமயத்தில், கனகமணிகுண்டலந்திகழுங் காதினா
னும், பட்டாடையணிந்த அரையினனும், இராசகுமாரன்
போல் மான்மதக்குழம்பணிந்த மார்பினனும், அன்றுமலர்
ந்த பூச்சூடிய தலையினனும், உருப்பெற்ற விலாஸம்போலவு
ம் உடலடைந்த கவனம் போலவும் சிருங்காரரசப்பெருக்
குப் போலவும் பூமண்டலத்திழிந்த மகேந்திரன் போலவு
மாய் விளங்கும் ஒரு வித்துவான், சபைக்குவர, அவனைக்
கண்ட புலவர்களியாவரும், அச்சத்தையுஞ் சந்தோஷத்தையு
மடைந்தனர். அவனோ எல்லாரையும் பணிந்து 'போஜன்
எங்கே?' எனக்கேட்க, 'இப்பொழுதே அந்தப்புரத்துக்குப்
போயிருக்கின்றனன்' எனச் சொன்னார்கள். அதன்பின்பு,
இவன், அவர்கட்குத் தனித்தனியே தாம்பூலங் கொடுத்து
யானைக்கூட்டத்தினடுவிற் சிங்கம்போல விருந்தான். பிறகு
அம்மகாபுருடன், அவர்களைச் சங்கரகவிக்குக்கொடுத்த தான
த்தாற் கோபித்துக்கொண்டிருப்பவர்களாக வூகித்தறிந்து,
'நீங்கள் பன்னிரண்டிலட்சமுஞ் சங்கரகவிக்கே கொடுத்த
தாக எண்ணற்க; சங்கரகவிக்கு ஒரு இலட்சமே கொடுத்
தான்; ஆனால், எப்போது ராஜா, சங்கரபூசைசெய்ய வெண்
ணினானோ அப்போது இவன் வந்தமையால், இவன்பெயர்

கொண்ட பதினாறுருத்திரர்களும் இவனிடத்திலேயே
கூடாகவிருக்கக்கண்டு, அவர்களுக்குரிய ருவ்வோரி
தையும் இவனுக்கே கொடுத்தான். இதுதான் அரசனை (
ளாமும்' எனக் கேட்ட யாவருங் களிகூர்ந்தனர்.

பின்பு ஓர்சேவகன், அப்புலவனது சொரூபத்தை
இயக்கு விரைவாயறிவிக்க, எந்தனும் 'தன்கருத்தைத் ;
தமாயறிந்தவன் அம்மகேசனே' என்றெண்ணிக்கொ
சபைக்குவந்தான். அவனும், அரசற்கு ஆசிர்வதிக்க, 
றனும், அவனைத்தொழுது கட்டிக்கொண்டு, தன்கைத்
ரையால் அவன்கைத்தாமரையைப் பிடித்தழைத்துக்
ண்டு மேன்மாடத்தின்மேற் போய் உயர்ந்த சாளரத்தி
ய் இருந்து, 'அந்தணா! நின்பெயரால் எவ்வெழுத்து
சௌபாக்கியத்தை யடைந்திருக்கின்றன? நின்பிரிவால்
தேயம் எல்லோர்களைப் பிடிக்கின்றது?' என்ன, கவி, இ
வன்கையில் 'காளிதாஸன்' என்று எழுத, அரையன், 
த்து அவன்தாளில் வீழ்ந்துபணிந்தான்.

காளிதாசபோசர்கள் அவ்விடத்திலேயே இரு
பார்த்துக்கொண்டிருக்கையில், மாலைப்பொழுதுண்டாக,
சன் 'நண்ப! அந்தியை வருணி' என்ன, கவி "தாமரை
பொலிவு, விசனமுற்றோன் கல்வியைப்போற் குறைகின் 
வண்டுகள், வேற்றுநாட்டிற் குணமுடையோர்களைப்போ
தைனியத்தை யடைகின்றன. இருள், அற்பவாசகனைப்போ
உலகத்தை வருத்துகின்றது. கண்கள், உலோபியின் பெ
ள்களைப்போல்வீணாகின்றன" என்னும்பொருள்கொண்
பாட்டைக் கூறி, 'ஒருவர்க்கொருவர்க்கு எவ்வளவு
சினேகமுண்டாகவில்லையோ, அவ்வளவுவரை செய்யப்ப
உபசாரம் நன்மையாகவே தோன்றுகின்றது; சினேகமு

டானபின் செய்யப்படும் உபசாரம் கபடமாகவே தோன்றுகின்றது. எவனொருவன் நல்லகாவியங்களின் பாகுபாடுகளையும் கவிகளின் முறைமையையும் அறிகின்றனனோ, அவனாலே அக்கவிகளுக்குச்செல்வம்நிறைந்த இப்புவிமுழுதுங் கொடுக்கப்பட்டது போலும். நல்லகவியின் சொற்செல்வத்தை நல்லகவி யறிவனேயன்றிப் பிள்ளைப்பேற்றின் பெருமையை மலடியறியாவாறுபோல் மற்றையோன் அறியான் என அரசனைப் புகழ்ந்தனன்.

பின், முறையே போசகாளிதாசர்களுக்கு நண்பு வளர்ந்துவந்தது. இப்படியிருக்க, காளிதாசன் தாஸிலோலனாயிருப்பதை யறிந்து எல்லோரும் அவனிடத்திற் பகை கொண்டு அவனைத் தொடவும் அருவருப்புற்றிருந்தார்கள்.

பின்பு ஓர்நாள், சபைநடுவில் காளிதாசனைப் பார்த்துப் போசன், தன்னெஞ்சில், 'இந்த அறிஞனுக்கும் மன்மதாவத்தையின் பீடை எப்படி யுண்டாயிற்று?' என்று சிந்தித்துக் கொண்டிருப்பதை அறிந்த அவனும், "எரிதொழில் மேற்கொண்ட புராரிக்கும் அப்படிப்பட்டபௌருடம் பாதியாயிற்றென்றால், காமவிருப்பத்தைக் குறித்து நினைக்குமளவில் மனிதர்களின்கதையைக் கேட்பானேன்?" என்னும் பொருளமைந்தபாட்டைக் கூற, அதற்கு அரசன், களித்து அட்சரத்துக்கிலட்சந் தந்தனன். பிறகு காளிதாசன், "மகாராசனே! திருவுடையோனே! உன்னுடைய புகழினால் உலகெல்லாம் வெளுப்பாக்கப்பட்டவளவில், பரமபுருஷன் பாற்கடலையும், சடைமுடியான் கைலாசத்தையும், வச்சிரப்படையான் ஐராவதத்தையும், இராகு கலைமதியையும், தாமரையோன் அன்னத்தையுந் தேடுகின்றனர்கள்" என்றும், "போசராசனே! அரசனே! மூவுலகும் நின்புகழால் குழப்

பட்டவளவில், கமலத்தோன் பாலையும்நீரையும் கலந்தெடுத்துக்கொண்டு எல்லாப்பறவைகளின் வரிசைகளிடத்திலுஞ் செல்கின்றான்; சக்கரப்படைபூண்ட முகுந்தன் தயிரை யெடுத்துக்கொண்டு எல்லாக்கடல்களையுஞ் சுற்றித்திரிகின்றான்; பசுபதியானவன் உயர்ந்தமலைகளெல்லாவற்றையுந் தனது நெற்றிக்கண்ணைத் திறந்துபார்த்துக் கொண்டெரிக்கின்றான்" என்றும், "ஓ! வித்துவானே! அரசர்க்கதிபனே! நான்முகத்தோன், நின்புகழை நிறுப்பதற்கு எண்ணி, கைலாசத்தை யோர்தட்டிலிட்டு அது இலேசாக விருந்தமையால் அந்நிறையின்குறை தீர்கைக்காக அதன்மேல் எருதையும் அதன்மீது உமைகேள்வனையும் அவன் சிரத்தில் கங்காசலத்தையும் அதன்மேல் அரவுக்கரசையும் அதற்குமேல் அமுதகிரணனையும் வைத்தனன்" என்றும், பொருள்கொள்ளக்கிடந்த பாக்களைப் பாடித் துதிக்கக் கேட்ட அரசன் அக்கரந்தோறு மிலக்கந் தந்தனன்.

சில தினங்களுக்குப்பின் ஓர்நாள், சுருதிஸ்மிருதிகளின் கரைகண்டவர்களாகிய சிலர், அரசன் கவனத்தி லிஷ்டமுடையவ னெனவறிந்து, பட்டணத்துக்கு வெளியிலுள்ள காளியின் பிரசாதத்தாற் கவனஞ்செய்வோ மென்று அவ்விடத்தி லிருந்தனர். அவர்களுள் தன்னையே புலவனாக நினைத்திருக்கு மொருவன், "அரசர்க்கரசனே! போசனங் கொடும்" என்னுங் கருத்துக்கொண்ட ஓரடிசெய்தனன். மற்றொருவன், "நெய், பருப்புக்களுடன் கூடிய" என்னும் பொருள்பெற்ற மற்றோரடியைச் செய்தனன், பின்னிரண்டடிகள் ஒருவருக்குந் தோன்றவேயில்லை. அப்போது காளிதாசன், சேவிப்பதற்காகக் காளிகோயிலுக்குவந்தான். அவனைப்பார்த்து எல்லாவந்தணர்களும், 'வேதமுற்றும் நன்கு

யிந்த எங்களுக்கோ ஒன்றுங் கொடுக்கின்றிலன்; உடம் கமைப் போல்வார்கட்கோ வேண்டியவளவு அரசன் கொடுக்கின்றான்; ஆகையால், கவனஞ்செய்வோமென்று நினைத்து இவ்விடம் போந்து வெகுநாழிகையளவு ஆலோசித்துப்பார்த்தும் முன்னிரண்டடிகளே செய்யப்பட்டன; பின்னிரண்டடிகள் செய்து தருவீரேல்,ஏதாவது கொடுப்பன்' என்றுகூறி அவன்முன் அவ்விரண்டடிகளையுஞ் சொல்ல, அவற்றைக்கேட்டு, அவன் "சரற்கால சந்திரனது நிலாப்போல் வெளுத்த எருமைத்தயிரையும்" என்னுங் கருத்துக்கொண்ட அடிகளைச் செய்துகொடுப்ப, அவர்களும், அரசனரண்மனையைக்கிட்டி வாயிலோரை நோக்கி, 'யாம் கவனஞ்செய்துகொண்டு வந்தோம்; அரசனைக் காட்டும்' என்றனர். அவர்களும், களிப்பினால் சிரித்துக்கொண்டேபோய் அரசனைப் பணிந்து, 'பாட்டுக்குச் சத்துருக்களாகிய மறையவர்கள் மொச்சைக்கொட்டை போன்ற பற்களைக் காட்டிக்கொண்டு இடையில் நகைவைத்தவர்களாய், வாயிலில்நின்றுகொண்டிருக்கின்றனர்கள்; எம் ஆண்டவனே!' என்ன, அரசனாலுட்புகுவிக்கப்பெற்ற அன்னோர்கள், சபையில் ஒன்றுசேர்ந்துகொண்டு அக்கவனத்தைப்படித்தனர்கள். மன்னவன், அதைக்கேட்டு, பின்னீரடிகள் காளிதாசனால் செய்யப்பட்டன வெனவுணர்ந்து, அவ்வந்தணர்களைப் பார்த்து, 'எவனால் முன்னடிகள் செய்யப்பட்டனவோ, அவன் இனியொருபோதுங் கவனஞ்செய்யத்தக்கவனல்லன்; பின்னடிகளுக்கே சிறிது கொடுக்கின்றேன்' எனக்கூறி அட்சரத்துக்கிலட்சங் கொடுத்தனன்.

அவர்கள் பொன்னையெடுத்துக்கொண்டு போனபிறகு, வேந்தன், காளிதாசனைப்பார்த்து, 'பாவல! பின்னடிகள் நின்னால்செய்யப்பட்டன' என்ன, அதற்குக் கவி 'அமோகத்தி

ளினிமையையும், கள்களின் கொடுமையையும், கவனத்தின் பாகுபாட்டினையும் அநுபவரசிகனே கண்டறிகின்றான்' என்று கூற, இறைவன், 'நற்கவியே! உண்மையையே சொல்லுகிறாய்; நன்றாயாலோசித்துப் பார்க்கும்போது, உலகத்தில் மூன்றுபொருள்களே உள்ளத்துக்கினிமை பயக்கின்றன; அவை, கன்னற்கட்டியும் கவிகளின உண்மையுணர்வும் இனியநண்பர்களின் கருத்தொத்த வார்த்தையுமே' என்றனன்.

சிலநாளைக்குப்பின் வாயிலோன், வள்ளலைத்தொழுது, 'வேந்தே! தமிழ்த்தேயத்தினின்றும், இலட்சுமீதரனென்னும் பெயர்பெற்ற வோர்கவி வந்து வாயிலிற் காத்துக்கொண்டிருக்கின்றான்' என்ன, குரிசில் 'உட்புகுவி' என்ன, அவன், புக்கு அரசற்கு மங்களத்தைக்கூறி, அவனாணையாலிருந்து, 'தேவ! இதுவோ நினது புலவர்கணிறைந்த சபை; நீயோ விஷ்ணுவாயிருக்கிறாய்; ஆகையால் இங்கு எனதுபுலமை எவ்வளவு? ஆயினுஞ் சிறிதுசொல்கின்றேன்' என்றுகூறி "இந்திரன் கையிலுள்ளவச்சிரம், ஆகாயத்திலுள்ளசுடுகதிர், கடலினிடையிலுள்ளநெருப்பு ஆகியஇவைகள் போசனது வெற்றியைச் செய்த நான்முகனால் வழித்தெறியப்பட்ட மிகுதியாயுள்ள பரமாணுக்களா?" என்னுங் கருத்துக்கொண்ட பாட்டைக் கூறினான். அதனாற் கழகம் ஆச்சரிய முற்றது. அரசனும், அவனுக்கு அட்சரலட்சந் தந்தனன். அக்கவி, நிருபனை நோக்கி, 'தேவ! பொறுமையும்கொடையும்நற்குணங்களும் வாய்ந்த யசமானன் எவ்வாறு அரியனோ, அவ்வாறே புலமையும் ஒற்றுமையும் ஒழுக்கமும் பூண்ட கவியும் அரியன். ஓ! அரசனே! இந்த நகரத்தில்வசித்துக்கொண்டிருக்கவேண்டுமென்று குடும்பத்துடனே வந்திருக்கின்றேன்' என்ன,

குரிசில் முதன்மந்திரியை யழைத்து, 'இவருக்கு ஓர்வீடு கொடும்' என்ன, அவன், அந்நகர்முற்றுஞ் சுற்றித்திரிந்தும், ஒருவரைவது மூடரைத் தன்கண்ணிற் படாமையால், கடைசியாக ஓர்குவிந்தனது வீட்டைக் கண்டு அதனுள்நுழைந்து, 'ஓ! குவிந்த! வீட்டினின்றும் வெளியிற் போ; நின் வீட்டிற்குப் புலவன் வரப்போகின்றான்' என்றுசொன்னான். உடனே அவன், அரண்மனைக்குச்சென்று ஏந்தலைத்தொழுது, 'தேவ! நினது முதன்மந்திரி என்னை மூடனாக நினைத்து வீட்டினின்றும் வெளிப்படுத்துகின்றான். நான் மூடனோ? பண்டிதனோ? அதை நீயேகண்டறி. வேற்றரசர்களின் முடியிலுள்ள மணியுறைந்த பதமலரை யுடையோனே! கவனம் பண்ணுவேன்; முயற்சியோடு செய்யின் மிகநன்றாய்ப்பண்ணுவேன். ஆகையால், கவனம் புனைகின்றேன்; நெய்கின்றேன்; ஏகுகின்றேன்' என்று சொல்ல, அரசன், நீ யென்று சொல்லாநிற்கும் குவிந்தனைப் பார்த்து, 'நின்பதவரிசை எளிமையானதே; கவனத்தினினிமையோ மிகவும் அழகிது; ஆனாலும், கவனத்தை யாராய்ந்து சொல்லவேண்டும்' என்ன, கேட்ட குவிந்தன், மிக்ககோபங்கொண்டு, 'அரசனே! இராசதருமந்திற்கும் வித்துவான்களின் தருமத்திற்கும் மிக்கவேற்றுமையுண்டு; இங்கு அதைச்சொல்லச்சக்தியற்றவனாயிருக்கிறேன் என்று கூற, அரசன் 'இருந்தாற் சொல்' என்ன, 'தேவ! காளிதாசனைத்தவிர மற்றெவரையும் நான் புலவராகமதியேன். அவனன்றிக் கவனத்தி னுண்மை யறிந்த எப்புலவன் நினது சபையிலிருக்கிறான்? குருவின் கிருபையாகிய அமுதத்தினுதித்த சரச்சுவதியின் வைபவமெதுவோ, அது பாடங்கேட்கும்முறையுணர்ந்த கவியினால் எளிதாக அடையத்தக்கதேயன்றி வேறன்று. குட்டையில் வீழ்ந்து நீரைக்கலக்கும் எருமையா

னது தினந்தோறும் அதிலேயே இருந்தும், அதனிடத்துள்ள தாமரைமணத்தை அறியவல்லதோ? திருந்திய சொல்லினிமைகொண்ட என்னுடைய இவ்வாக்கின் கூட்டம், கவிகளின்மனத்தில் பயனுள்ளதாயும், மற்றையோர்மனத்தில் பயனற்றதாயும் தோற்றுகின்றது; அழகியபெண்ணின் கடைக்கணோக்கமானது சிறுவர்க்குப் பயனற்றதாயும் வாலிபர்க்குப் பேரானந்தம் விளைப்பதாயுமிருக்கின்றது' என்றனன். அப்போதங்கிருந்த சீதை என்பவள், 'சடனானவன் ஆழ்ந்த பொருள்கொண்ட காவியத்தில் வருந்துகிறான்; தனது மூடத்தன்மையில் வருந்துகின்றிலன். இளைத்துப்போன சரீரமுடையவன், பெரும்பாலுங் கஞ்சுகத்தையே நிந்திக்கின்றான்' என்றாள். பிறகு குவிந்தன், 'இளமையிற் பிள்ளைகளும், துதிப்பதிற் கவிகளும், போரிற் படர்களும் 'நீ' என்று விளித்தல் தகுதியாயிருக்க, இறைவனே! உனக்கு வந்த மயக்கமென்னை? ஆலோசித்துப்பார்' என்ன, தோன்றல் 'குவிந்த! நினதுசொல் மிகவும் நேர்மையானதே; இனி அஞ்சேல்' எனக்கூறி அவனுக்கு அளவிறந்தபொருள் கொடுத்தனன்.

இப்படிச்சிலகாலம் கழிந்து வருகையில், ஓர்நாளிரவில், வேந்தன், வேற்றுவேடத்தோடு ஒருவனாகவே பட்டணத்திற் சஞ்சரித்துக்கொண்டே பாணனது வீட்டுவாயிலில் வந்துநிற்கையில், அரசனாற் பலமுறை சம்மானிக்கப்பட்டிருந்தும் பண்டையவினையால் வறுமையை அனுபவித்துக்கொண்டிருக்கும் புலவரிறையான பாணன், வறுமையாற் கலக்கமுற்று, அவ்விரவில், தன்மனைவியை நோக்கி, 'தேவி! நம்மரசன் எத்தனைமுறை என்மனோரதத்தை நிறைத்தனன்? மறுபடி இப்போது வேண்டிக்கேட்டினுங் கொடுக்கவே போகின்றான். ஆனாலும், இடையறாதுகேட்கும்விடயத்தில்

மூர்க்கனது நாவும் மரத்துப்போகின்றது’ எனக்கூறி, ஒரு
முகூர்த்தகாலஞ் சும்மாவிருந்து, பின்பு, “புரமெரித்தவனே!
அரனே! ஆலகாலமென்னும் விஷம், யாசனைச்சொல் ஆகிய
இவ்விரண்டின் சுவைவேறுபாட்டினை நினது நாவொன்றே
நன்கறியும்” என்னுங் கருத்தமைந்த பாட்டைச் சொல்லி
விட்டு, ‘வறுமையினது மேலானஉருவம் யாசித்தலே; செல்
வமின்மையன்று. சங்கரர் கோவணமொன்றே யுடையவர்;
ஆயினும் பரமேச்சுரர். சுகங்களுக்குச் சேவையும், செல்வ
த்துக்கு விசனமும், குணங்களுக்கு யாசனையும், சனங்களுக்
கு அற்பவரசனும், குலங்களுக்கு ஒழுக்கமற்றமைந்தனும்
வேரோடுவெட்டும் வலிய கோடரிப்படையே. வறுமை
யிருப்பினும் அதை இறைவனுக்கு அறிவிக்க யான் வலியற்
றவனா யிருக்கின்றேன். மேகமானது சிறிதுபோழ்திருந்
தும் உலகத்துக்கெல்லாம் நட்புத்தன்மையை யடைகிறது;
சூரியன் நாடோறும் பரந்த கரத்தினனாயினும் சந்தாபத்தை
ப்பண்ணுகின்றான். மேலும், தேவி! வைச்சுவதேவம்பண்
ணும் அவசரத்தில் வந்தவர்கள் பசியோடேயே திரும்பிச்
சென்றார்களென்னுமிஃதொன்றுமே என்மனத்தை அறுக்
கின்றது. வறுமையென்னும் நெருப்பின்வெம்மை களிப்
பென்னும் நீரால் அவியும். யாசகனது விருப்பமறிய உண்
டாகுமுட்கொதிப்புத் தணிவது எதனால்?” என்றுஞ்சொல்
லக் கேட்ட அரையன், ‘இப்போது கொடுக்கவல்லமையாது;
காலையிலேயே பணத்தை நிறைந்த ஆசையுடையவனாகச்செய்
வேன்’ என்று வெளிப்புறப்பட்டு, ‘படிப்பவனைச் சொற்செ
ல்வனாகச் செய்யமாட்டாத காவியத்தினாலும், ஒருவனைத்
தன்வழிக்குக் கொணரமாட்டாத பலத்தினாலும், யாசகரின்
குறையை நீக்கமாட்டாத தனத்தினாலும் என்ன பயன்?’

என்று எண்ணிக்கொண்டே அந்நகரில் திரியாநிற்கையில், வழியிற்போய்க்கொண்டிருந்த திருடரிருவரில் ஒருவனான சகுந்தனென்பவன், மற்றவனைநோக்கி, 'தோழ! உலகெல்லாம் பேரிருளான்மூடப்பட்டிருக்கையினும் ஆங்காங்குள்ள பொருள்கள் கடுகளவினவாயினும் அவைகளை மையின்வலியால் நன்றாய்க் காண்கின்றேன். ஆயினும் பண்டசாலையினின்றுங் கொணர்ந்த பொன்மணி இவைகளின் சுவையும் எனக்குச்சுகந்தருகின்றிலது' என்ன, மற்றையோனாமாரானனென்பவன் 'பண்டசாலையினின்றுங் கொணர்ந்த பொன்மணிஇவைகளின்சுவை இனிதாயிருக்கவில்லையென்று ஏதுவாற் சொல்கின்றாய்?' என்ன, சகுந்தன், 'பட்டணத்துக் காவற்சேவகர்கள் எங்குஞ் சுற்றித்திரிந்துகொண்டிருக்கின்றனர்கள். இவர்கள் அடிக்கும் முரசு பறைமுதலிய வாத்தியகோஷத்தினால் எல்லோரும் விழித்துக்கொள்வர்; ஆகையால், கொணர்ந்ததைப் பங்கிட்டு அவரவர்பாகத்தை யெடுத்துக்கொண்டு விரைவாய்ப்போகவேண்டும்' என்றனன் மாரானன் 'நண்ப! இரண்டுகோடியளவுள்ள இந்தப்பொன்மணிக்குவைகளைக்கொண்டு என்ன செய்யப்போகிறாய்?' என்ன, சகுந்தன் 'இந்தப்பொருளை, வேதங்களையும் வேதாந்தங்களையுமுணர்ந்த வேதாந்தனானுக்கு, மற்றெவரையும் யாசியாதிருக்கும்வண்ணங் கொடுப்பேன்' என்ன, மாரானன் 'தோழ! சொல்வோர்க்குங் கேட்போர்க்கும் புளகமுண்டாக்குந் தானமும் வீரமுமே மேலானவையாம். எதுவ! இந்தத்தானத்தால் உனக்கு எப்படிப் புண்ணியமுண்டாகும்?' என்ன, சகுந்தன் 'திருடிக்கொணர்ந்த பொருளை இவ்வாறே செலவழித்தல் எம்முன்னோர்களின் தருமமாம்' என்ன, மாரானன் 'தலையறுப்புத் தண்டனைக்குட்பட்டுச் சம்பாதித்த

பொருளெல்லாவற்றையும் எப்படிக் கொடுத்துவிடுகிறது?' என, சகுந்தன் 'மூர்க்கனான மனிதன் தரித்திரம் வந்துவிடுமென்னும் ஐயத்தினால் பொருளைக் கொடுக்கிறதில்லை; தெரிந்தமனிதனோ தரித்திரம் வந்துவிடுமென்னும் ஐயத்தினால் பொருளைக் கொடுக்கிறான். வேதமயமான பாத்திரங்கள் சில. தவமயமான பாத்திரங்கள் சில. ஆயினும், சூத்திரான்னத்தை யுட்கொள்ளாததே பாத்திரங்களில் மேலான பாத்திரமாம். தோழ! இந்தப்பொருளைக்கொண்டு நீ என்னசெய்யப் போகிறாய்?' என்ன, மராளன் 'நண்ப! காசிதேசத்தில் வசித்துக்கொண்டிருப்பவனான ஒருபிராமணபிரமசாரி என்தமப்பனாரிடத்துக்கு வந்து, காசியில் வசிப்பதாலுண்டாகும் பலத்தை வருணித்துச்சொல்லக் கேட்ட என்தந்தை, சிறுபிராயமுதல் செய்துவந்த திருட்டுத்தொழிலாலுண்டான பாவங்கள் தொலையுமாறு வைராக்கியம் பூண்டவராய்க் குடும்பத்துடன் காசிக்குப்போகிறார்; அதற்காகத்தான் இப்பொருள்' என்ன, சகுந்தன் 'உன்தந்தையின் பாக்கியமே பாக்கியம்! தேவராசாவான இந்திரன், காசியிலேயே வசித்துக்கொண்டிருக்கும் நாய்க்குஞ் சமனாகுவனோ? எந்த இடத்தில் பண்டிதர்களுக்கும் சண்டாளர்களுக்கும் சமமாக மோட்சங் கிடைக்குமோ, அந்த இடமாகிய காசிக்ஷேத்திரம், பழைய வினைகளாகிய பயிர்களுக்குக் களர்நிலமன்றோ! மரணம்மங்களமாயும், விபூதி ஆபரணமாயும், கோவணம் வெண்பட்டாயும் இருப்பது எவ்விடத்திலோ, அவ்விடமாகிய காசியின் பெருமையை அளவிடவல்லவர் யாவர்?' என்று சொன்னான்.

இவ்வாறு இவ்விருவர்சொன்னவற்றையுங் கேட்டு அரசன், மனங்களித்ததுமன்றி, 'ஆ! ஆ! விதியின்விளைவு எவ்வாற்றானும் விசித்திரமானதே! இந்த இருவருக்கும் இப்படிப்

ஆடம்பரங்களினால் மற்றையவரசர்கள் அடையும்பதத்தைச் சாரமுணர்ந்த போசன் கலையொன்றினாலேயே அடைகிறான்' என்ன, நரபதி, கிரீடாசந்திரனுக்கு இருபதுஅரசயானைகளையும் ஐந்துகிராமங்களையும் அளித்தனன். பிறகு கவி, அன்னானைத் துதிக்க நினைத்து, "கண்ணிரண்டில் கங்கணம்; கைத்தளிரில் திலகம்; போசனது பகைவர்களின் மடந்தைமார்க்கிருக்கும் ஆபரணவிசித்திரம் என்னே!" என்னுங் கருத்துவாய்ந்த செய்யுளைக் கூற, இறைவன், சந்தோஷித்து மீண்டும் அட்சரத்துக்கு இலட்சந் தந்தனன்.

பின்பு ஒருதினத்தில், மூப்பினாற் றளர்ந்த சரீரத்தையுடைய இராமேச்சுரனென்னும் புலவன், சபைக்குவந்து, 'சிங்கங்களும்நற்கவிகளும் யானையிறைச்சியினாலும் அரசச்செல்வத்தினாலும் எங்கேயோ வோரிடத்திற் பாரணம் பண்ணுகிறார்களே யொழிய மற்றையவிடங்களிலெல்லாம் பட்டினியுற்றவர்களே. குதிரைகளையும் பண்டிதர்களையும் மற்றையவர் காக்கின்றனர்; கசேந்திரங்களையும் கவீந்திரர்களையும் வைத்துக்காப்பவன் வேந்தனொருவனே. விலைமாதர்களுக்கு அழகு, ஆபரணங்களினாலும் பட்டாடைகளினாலு முண்டாகிறது; இராசகுமாரர்களுக்கோ, பராக்கிரமத்தினாலுந் தானத்தினாலு முண்டாகிறது' எனக்கூறச் செவியுற்ற பூபாலன், அக்கவிக்குத் தன்னுடைய பூஷணங்களெல்லாவற்றையுங் கழற்றிக் கொடுத்தனன்.

பிறகு கவி, "போசனே! உன்னுடைய புகழாகிய பெண்ணுக்கு ஆகாயம் நெற்றியிலிடும் பெரிய கஸ்தூரிப்பொட்டாய் விளங்குகின்றது" என்னுங் கருத்தமைந்த பாட்டைக் கூறி, 'புலவன் தானே அறிந்துகொள்ளவல்லவனாகையால் அவனிடத்திற் குணங்களைப்பற்றிப் பேசவேண்டிய அவசிய

மில்லை. மூர்க்கன் சொன்னாலுந் தெரிந்துகொள்ளமாட்டான்:
ஆகையால், அவனிடத்திலுஞ் சொல்லவேண்டிய அவசிய
மில்லை' என்ன, அதனால் எல்லோரும் ஆச்சரியமுற்றனர்.
பிறகு, இராமச்சுரகவி 'நல்லகவியானவன் காவியத்தை
மாத்திரம்பண்ணுகிறான்; சுஜனனோ அதற்குமேலானபுகழை
யுண்டாக்குகிறான். தண்ணீர் தாமரையை யுண்டாக்குகின்
றது; சூரியனோ அதற்குச் சோபையை யுண்டாக்குகிறான்'
என்ன, அரசன், மிகவுஞ் சந்தோஷித்து அவற்கு வேண்டிய
பொருள் தந்தனன். பின்பு கவி, அரசனை நோக்கி, 'புகழில்
விருப்பற்ற உலோபியானவன், செவிடன் சங்கீதங் கேளாத
வாறுபோல், கவனத்தைக் கேட்கின்றிலன்' என்றான். அப்
போது அங்கிருந்த சீதையென்பவள் 'யானைகளும் கவிக
ளும் அரசனை யடுத்திருந்தாலன்றி விளக்கம் பெறுத
வில்லை' என்ன, காளிதாசன் 'பார்வையற்ற கண்ணை விளக்
கொளி கிட்டாததுபோல் கொடாதவனது மனத்தைக் கவிக
ளின் வாக்குக் கிட்டாது' என்ன, வேந்தன், ஒவ்வொருவருக்
கும் ஒவ்வோரிலக்கங் கொடுத்தனன்.

பிற்பாடு ஒருநாளில், வேந்தன், காளிதாசனை யாவரி
னும் மேலானவனாக எண்ணியிருந்தும், அவன் தாஸிலோல
னாயிருப்பதைக் குறித்து மனத்தில் வருத்தப்பட்டுக்கொண்
டிருப்பதைக் குறிப்பாலுணர்ந்த சீதையென்பவள், 'குண
மொன்றையே காணுந்தன்மையுடையோர், குணவானிடத்
தில் சிறிது துர்க்குணங் காணப்படினும் அதைக் கவனியாது
குணத்தையே நோக்கிக்கொண்டு நிற்பர்; சந்திரனைப் பார்
க்க விரும்புபவர்கள் அவனிடத்துள்ள களங்கத்தைப் பா
ராட்டுகின்றிலர்' என்றுசொல்ல, களித்த அரசன், அவளு
க்கு இலட்சங் கொடுத்தான்; ஆயினும், காளிதாசனைமாத்

மித்திரனெழுதிவைகண்டு சந்தோஷிப்பவனு மிருக்குஞ் சந்திரனும் இவனுக்குப் பிரியனு யிருக்கிறான். ஆகலால் அடுத்தவர்களிடத்தில் குணதோஷவிசாரம்பண்ணுதல் தகுதியன்று' என்ன, அரசனும் 'இனியவனே! இவையெல்லாம் உண்மையே. நானிக்காலத்திலேயே காளிதாசனைச் சந்தோஷிப்பிக்கிறேன்' என்று புகன்று, மறைந்தான். செய்கடன்களை முடித்துக்கொண்டு சபைக்கு வந்தனன். அப்போது பண்டிதர்களும், கவிகளும்,பாடகர்களும், இதரஜனங்களும் சபைக்குவர, காளிதாசனொருவன் மாத்திரம் வராதிருக்கக் கண்டானவன், தன்சேவகர்களிலொருவனை,அவனையழைத்துக்கொண்டுவர ஏவ, அவன், போய்க் காளிதாசனைத் தொழுது, 'சுவாமீ! உம்மை எம்மன்னவர் அழைக்கின்றார்' என்ன, 'சேவக! அவமானப்படுத்திய வேந்தன் இன்றைக்காலையிலே என்னையழைக்கக் காரணமென்னை? சபையில் எவ்வெவனை யரசன் ஆசையோடு சம்மானிக்கின்றானோ, அவ்வவனை மிகுதரத்து, அரசனை யடுத்திருப்போர்கள் மதிக்கின்றார்கள். நேற்றும் அரசன் எனக்கு விசேஷ சம்மானம் பண்ணியதைக் கண்ட பொறாமையுடையோரிவர் என்மீது அரசனுக்குக் கோபமுண்டாகும்வண்ணம் கதைகள் பண்ணிக்கொண்டே யிருக்கின்றார்கள். எவ்விடத்தில், அறிவில்லாத அரசன் குணமுடையோர்களான மந்திரிகளின் பேச்சை மிகுந்து அவர்களின் வார்த்தைகளை விசேஷமாகக் கேட்கின்றானோ, அவ்விடத்துக்கு நல்லோர் போய வருவார்?' என்று ஆலோசித்துக்கொண்டே சபைக்குவரும் காளிதாசனைத் தூரத்திலேயேகண்டு களித்த அரசன், அவது சிங்காதனத்தை விட்டெழுந்து, 'சற்கவியே! வாக்தேவியனே! இன்றைக்கு ஏன் காலந் தாழ்க்கப்பட்டது?' என்று

சொல்லிக்கொண்டே ஐந்தாறடிதூரம் அவனுக் கெதிர்முகமாக நடந்துவந்தனன். அப்போது அச்சபையிலுள்ளோரெல்லோரும் தத்தம் ஆசனத்தினின்றும் எழுந்துநின்றனர். அதைக்கண்டு ஆச்சரியப்படாதவர் அங்கொருவருமில்லை. வைரிகளும் முகவொளியிழந்தனர். அதன் பிறகு நரேந்திரன், தன்னுடைய கரகமலத்தினால் அவன்கைத்தாமரையைப் பற்றிக்கொண்டு தனது சிங்காதனத்துக்கருகில் அழைத்துப்போய் அவனை யதிலிருக்கச்செய்து, தானும் அவன்கட்டளையா லிருந்தனன்.

காளிதாசன் அரசசிங்காதனத்திலிருக்கக் கண்டபாணனென்னுங்கவி, வலக்கையை யுயரத்தூக்கிக்கொண்டு, "புலவர்களுள் தோஷாகரனான சந்திரனைக் கலையுணர்ந்தவெவர் பெருமைப்படுத்தினரோ, அந்தச்சிவனா காளிதாசனைப் பெருமைப்படுத்தினதால் இந்தப்போசனும்?" என்னும் பொருள்வாய்ந்த பாட்டைச் சொன்னான்.

அதுமுதல், புலவர்களுக்குக் காளிதாசனிடத்தி லுண்டாயிருந்த கோபத்தீப் பற்றியெரிய வாரம்பித்தது.

பிறகு, அப்பண்டிதர்களுட் சிலர், தக்கபடி ஆலோசித்துக்கொண்டு அரசனுக்குத் தாம்பூலம் மடித்துக்கொடுப்பவளை யடுத்து, அவளுக்குக் கணக்கிறந்த அணிமணிகளைக் கொடுத்து அவளைநோக்கி, 'ஓ! நல்லபெண்ணே! இக்காளிதாசன் எங்களுக்குக் கீர்த்திவரவொட்டாமல் தடுக்கிறான். வித்தையில் அவனுக்கு நேரானவர் எங்களிலொருவருமில்லை ஆகையால், நம்முடைய வரசன் அவனை இப்பட்டணத்தைவிட்டுத் தொலைத்துவிடுமாறு நீ செய்யவேண்டும்' என்ன, அவளும் 'நல்ல முத்துச்சரமொன்று எனக்கு நீங்கள்கொடுத்தாற்றான் உங்கள்காரியம் நிறைவேறும்' என்றுசொல்லி

அவ்வரத்தைப்பெற்று, 'பண்டிதர்களுக்கும்முடியாத காரியம் என்றால் எப்படி முடிக்கப்படப்போகிறது?' என்றுசிந்தித்துக்கொண்டிருந்தனள்.

இப்படிச் சிலநாள் கழிந்தபின் ஒருநாள், வேந்தன் தனியாகப் பள்ளியறையிற் படுத்துத் தூங்கிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் இவள், அரசனுக்குச் செய்யவேண்டிய கால்பிடித்தல் கைபிடித்தல் முதலிய உபசாரங்களைச்செய்துவிட்டுக் கண்ணை மூடிக்கொண்டு அங்கேயே கபடமாகத் தூங்கினாள். அப்போது, அவள், 'கால்கையசைவால் அரசன் விழித்துக்கொண்டிருக்கிறான்' என்று நன்றாய்த் தெரிந்துகொண்டு, 'தோழி! மதநமாலினி! கொடியவனான அக்காளிதாசன், நாடோறும் தாசிவேஷத்தோடு அந்தப்புரத்துக்கு வந்துகொண்டிருக்கிறான்' என்ன, அதைக்கேட்ட வேந்தன், திடீரென்றெழுந்து, 'தரங்கவதி! விழித்துக்கொண்டிருக்கின்றையா?' என, அவளும், தூங்குபவள்போல் அதைக் கேளாமல் இருந்துவிட்டாள். அத்தீயவார்த்தையைக்கேட்ட இறைவன், 'இந்தத் தரங்கவதியோ, நடந்ததைக் கனவிற்கண்டு சொன்னாள்போலும். உலகத்தில் எவர்தாம் பெண்களின் நடக்கையைத் திருத்தமாய் அறியவல்லவர்?' என்றிப்படித் தன்னுள் ஆலோசித்து, மற்றைநாட்காலையில், தனக்குச் சுரநோய் வந்திருப்பதுபோல் கபடமாக நடித்துக்காட்டித் தன் வேலைக்காரி மூலமாய்க் காளிதாசனை வரவழைத்து அவள்மூலமாய் லீலாவதியையும் அழைப்பித்து அவளைப் பார்த்து, 'இனியவளே! இப்பொழுதே நான் பத்தியம் பண்ணவேண்டும்' என்ன, உடனே லீலாவதிதேவி கொணர்ந்துபரிமாறிய அன்னத்தையுண்ணும்போது, அரசன்சொன்ன பேச்சுக்குக் காளிதாசன் கூறிய

மறுமொழியைக் கேட்டு லீலாவதி சிரித்ததைக்கண்ட இறைவன், 'குதிரை எழும்புவதையும், மேகம் இடிப்பதையும், பெண்களின் மனத்தையும், புருஷனது பாக்கியத்தையும், மழை பெய்யாமையையும், மிகுதியாக மழை பெய்தலையும் தேவனே யறியானெனில் மனிதன் எங்ஙனம் அறிவன்? மேலும், அந்தணர்கள் பெருங்குற்றஞ் செய்தாராயினும் கொல்லத்தக்கவரல்லர்; இவனோ அந்தணர்க்கதிபனும், சரச்சுவதியின் வரபுருடனுமா யிருக்கின்றனன்' என்று தன் மனையாய்ந்து காளிதாசனைப்பார்த்து, 'கவியே! நீ, எவ்வாற்றானும் என்னூரில் இருக்கத்தக்கவனல்லை; பலபடச் சொல்லுதிற் பயனென்னை? மறுமொழியொன்றுங் கூறேல்' என்றனன்.

உடனே காளிதாசன், எழுந்து விலைமகள் வீட்டுக்கு விரைவாய்ச்சென்று அவளைக்கண்டு, 'இனியவளே! எனக்கு விடைகொடு; வேந்தன் என்மேற் கோபங்கொண்டு, என்னைத் தன்னூரைவிட்டுப் போகச்சொன்னான். ஆ! ஆ! ஒருவன் வினையாமலிருக்குங்காற் கூடாதவைகளைக் கூட்டுவதும் கூடியுள்ளவற்றைப் போக்குவதும் விதிதான். இது இப் புலவர்கள்செய்த வேலை யென்றே எனக்குத் தோன்றுகின்றது. அற்பவத்துக்கள்பல வொன்றுசேரின், அச்சேர்க்கை கடத்தற்கரியதே. புல்லாற்செய்த கயிற்றினால் யானைகளுங் கட்டப்படுகின்றனவே!' என்ன, அவள் 'அடுத்ததை யுள்ளவாறுகாட்டும் ஆடியைப்போல நட்பின் சுகதுக்கங்களைத் தன்னுள் அவ்வாறே காட்டாத நட்பு நட்பன்று. நாயக! நானிருக்கும்போது அரசனும் அவன்கொடுக்கும் பொருளாலும் உனக்கு ஆகவேண்டியதென்ன? நீ பயஞ்சிறிது மில்லாமல் என்வீட்டிலேயே வாழ்ந்துகொண்டிரு'

என்ன, காளிதாசன் அப்படியே யிருந்துகொண்டு காலங் கழித்து வந்தான்.

காளிதாசன், அரண்மனையைவிட்டுப் போனபின், விலாவதிதேவியானவள், 'தேவ! காளிதாசகவியுடன் உடன்றுடன் டாயிருந்த தன்னட்பு இப்போது வேறுபடக்காரணமென்னே? அவரைவிட்டு ஓட்டும்படி அவன் செய்த குற்றம் யாது? பெரியோர்களின் சிநேகம் கரும்பை நுனியினின்று தின்று வருவதற்கொப்பாகும்; அல்லாதவர்களின் சிநேகம் அடியினின்றுந் தின்றுவருதற்கொப்பாகும். அன்புக்குப் பாத்திரமாய் நம்பிக்கைக்கிடமாய் ஆபத்தில் காப்பதாயுள்ள நட்பென்னும் இரத்தினம் யாரால் படைக்கப்பட்டதோ!' என்ன, அந்தவார்த்தையைக் கேட்ட அரசன், நடந்ததை வெளியாமற்சொல்ல, கேட்ட தேவி 'தேவ! யான் நல்லவளோ, கெட்டவளோ என்பதைப் பரிசோதியாவிட்டால் நான் பிராணனை வைத்துக்கொண்டிருப்பதில்லை' என, நரபதி 'தேவி! நீ உண்மையையே சொல்லுகிறாய்' என்று சொல்லி, நெருப்பிற் காய்ந்து கொதித்துக்கொண்டிருக்கும் இரும்புருண்டையைக் கொணர்வித்து எதிரில் வைக்க, அவள், நாணமொடு தன்கற்பின்வலியால் எல்லாவற்றையும் அறிபவன்போல வந்துநின்று சூரியனைப்பார்த்து, 'ஓ! உலகக்கண்ணே! எல்லாவற்றுக்குஞ் சாக்ஷியானவனே! எல்லாவற்றையும் நீயே யறிவாய். கனவிலும் நனவிலும் அக்கவிஞனும் போசவேந்தருமன்றி எனக்குப் பதியன்றி மற்றொருவருமல்லர்' எனச் சொல்லிக்கொண்டே அதைத் தன்கைகளால் எடுத்துத் தன் கற்புநிலையைக் காட்டினள்.

பின்பு அரசன், விலாவதியின் கற்பொழுக்கத்தை வியந்து, நாணத்தால் முகங் கவிழ்த்துக்கொண்டு மிகவும் பய

த்தாபப்பட்டு 'தேவி! பொறுத்துக்கொள். பாபியான என்னைக்குறித்துச்சொல்லத்தகுவது என்ன இருக்கிறது?' என்று சமாதானம்பண்ணி யனுப்பினன். வேந்தனும், அதுமுதல் தூங்காமலும் உண்ணாமலும் பேசாமலும் மிக்கமனவருத்தமுற்றவனாய் இரவும்பகலும் அழுதுகொண்டே, 'எனக்கு நாணமேன் ? தாட்சிணியமேன்? வல்லமை என் ? ஆ ! ஆ! மகாகவியே ! காளிதாசனே ! என்னுயிர்த்தோழனே ! மூர்க்கனை யான் கேட்கத்தகாதவற்றைக் கேட்பித்தும், சொல்லத்தகாதவற்றைச் சொல்லியும் உன்னைவருத்தினேனே!" என்று பலவாறு பிதற்றி மோகங்கொண்டவன்போல் மூர்ச்சித்துக் கீழேவிழ, பின்பு நாயகிசெய்த உபசாரங்களால் தெளிந்தெழுந்து அவளைப் பார்த்துப்பார்த்துத்தன்னையேநிந்தித்துக்கொண்டிருந்தனன்.

காளிதாசனில்லாதபோசன்சபை, சந்திரனில்லா இரவுபோலவும், இரவியில்லாத் தினம்போலவும், கணவனில்லாப் பெண்போலவும், இந்திரனில்லாச் சுதன்மைபோலவும் விளங்கவில்லை.

இவ்வாறு சிலநாள் கழிந்து வருகையில், ஒருநாளிரவில் போசன், கலைநிறைந்த சந்திரமண்டிலத்தையும், தன்னெதிரிலிருக்கும் லீலாவதியின்முகசந்திரனையும் நோக்கி, பிராகிருதபாஷையில் ஓரடிசெய்து, மற்றைநாட்காலையில் தன்சபைக்கு வந்த பண்டிதர்களைப் பார்த்து, 'ஓ! கவிகளே! இந்தச்சமசியையைப்பூரியுங்கள்' என்றுகூறி, "இவளுடைய முகசந்திரனுக்குச் சமானமாதலை அந்தச்சந்திரன் அனுமாத்திரம் அனுசரித்துவருகிறான்" என்னுங் கருத்தமைந்த அவ்வடியைச்சொல்லி, 'இந்தச் சமசியை யுங்களாற்பூரிக்கப்படாமற் போகும்பட்சத்தில், நீவிர் என்பட்டணத்தில் இருக்

க்த்தக்கவ ரல்லீர்' என்றுஞ்சொல்லப் பயந்த அக்கவிகள், தங்கள்தங்கள் வீட்டுக்குப்போய் வெகுநாழிகைபரியந்தம் ஆலோசித்தும் அதனுடைய வுட்கருத்துச் சரியாக விளங்காதொழியவே, எல்லோரும் ஒன்றுசேர்ந்து பாணனை யனுப்ப அவனும், சபைக்கு வந்து, 'வள்ளால் ! " நீர் கொடுத்த சமசியையைப் பூரித்தற்கு எட்டுநாள் வரையறை கொடுக்கவேண்டும். ஒன்பதா நாட்காலையில் பூரியாமற் போகும்பக்ஷத்தில் நாங்களே ஊரைவிட்டு ஓடிப்போகிறோம்" எனப் பண்டிதர்கள் உம்மிடத்தில் சொல்லச்சொல்லி என்னை இங்குஅனுப்பினர்கள்' என்ன, வேந்தன் 'அவ்வாறேஆகுக' என, பாணன் இதை அவர்கட்குத் தெரிவித்துவிட்டுத் தன் வீடுபோய்ச் சேர்ந்தான்.

அதன்பிறகு அரசன்கொடுத்த எழுநாட்களுங் கழிந்து எட்டாநாள் இரவும்வர யாவரும் ஒன்றுகூடிய சமயத்தில் பாணனென்பவன்', ஐயோ ! நம்முடைய யௌவனமதத்தினாலும், வித்தியாமதத்தினாலும், இராசசம்மானமதத்தினாலுமேயன்றோ காளிதாசன் துரத்தப்பட்டான்; நேர்மையான விடத்தில் நாமெல்லோரும் கவிகளே ; கொடுமையான விடத்தில் அவனொருவனேயன்றோ கவி. அவனைத்துரத்திவிட்டு நாம் அடைந்த மகிமை என்ன ? அவனிருந்தால் நமக்கு இப்படிப்பட்ட அவத்தை ஏது ? முன் அவனைத்துரத்த யத்தனித்த நாமேஇப்போது அதன் பயனை அனுபவிக்கின்றோம், சாமானிய பிராமணத்துவேஷத்தாலேயே குலநாசம் உண்டாகும்; சரச்சுவதிசொரூபனானவனுடைய பெரும்பகைமையினால் கவிகுலநாசமுண்டாவதற்குத் தடையென்ன ?" என்றனன்.

அதைக் கேட்ட மயூரன் முதலாவுள்ள கவிகளெல்லாரும் மிகவும் கலக்கப்பட, சிலர் அதைத் தடுத்துச் சமாதானம் பண்ணி, 'வரையறைப்போ இன்றோடு முடிந்துவிடுகின்றது. காளிதாசனைத் தவிர வேறியாவர் சமஸ்யையைப் பூரிக்கவல்லவர்? போர் முகத்தில் சேவகர்களுக்கும், கவிமண்டலத்தில் கவிகளுக்கும் வெற்றி தோல்விகள் ஒருமுகூர்த்தத்திலுண்டாகியே யுண்டாகின்றன. உங்களுக்குத் தகுதியாயிருக்குமாயின், பண்டங்களைப் பண்டிகளி லேற்றிக்கொண்டு இவ்விரவில் வெளியிற் போய்விடுவதே நலம். இல்லாவிடின், இராசசேவகர்கள் நாளைக்காலைப்பொழுதிலேயே நம்மை வலிய வெளிப்படுத்துவார்கள்; அப்போது கோமாத்திரத்தோடேதான் போகவேண்டிவரும்' என்னக் கேட்ட யாவரும், அவ்வாறே செய்ய நிச்சயித்து, தங்கள் தங்கள் பண்டங்களை எருத்துப்பண்டிகளில் ஏற்றிக்கொண்டு போகா நிற்கையில், அவ்வழிக்குச் சமீபத்திலுள்ள அந்தப் பிள்ளைப்பிட்டியொத்தி ஆலாவிக்கொண்டிருந்த காளிதாசன், வழியிற் செல்லும் புலவர்களின்பேச்சைக் கேட்டு, அவ்விலைமகளின் வேலைக்காரியை யழைத்து, 'அடீ! இவ்விரவில் இவ்வழியிற் செல்லுகின்றவர்கள் யாவர்? நீ போய்ப் பார்த்துக்கொண்டுவா' என்ன, அவளும், ஓடிப்போய் அவர்களைப் பார்த்துவந்து, 'ஐய! ஓரரசவன்னம் வசித்திருக்கையிற் குளத்துக்கு எவ்வழகு உண்டாயிருக்குமோ, அவ்வழகு ஆயிரங்கொக்குகள் அதன்கரையிற் குடியிருந்தாலும் உண்டாகுமோ? பாணன் முதலாயுள்ள எல்லாக்கவிகளும் நடந்து போகின்றார்கள். இதிற் சந்தேகமில்லை' என்ன, காளிதாசன் 'அடீ! பறந்துபோகும் இவ்வற்பர்களை நான் காக்கும்படி விட்டுப்போய் என்னுடைகளைக் கொணர்ந்து

கொடு. வருத்தமுற்றவர்களைக் காக்கமாட்டாதவன் வல்லமையும், இரப்பவர்களுக்கு உதவமாட்டாதவன் செல்வமும், பலர்க்கும் இதமுண்டாகச்செய்யாதவன் தொழிலும், சாதுக்களை விரோதிப்பவன் உயிர்வாழ்க்கையும் பயனற்றனவே' என்று சொல்லி, அவள் கொணர்ந்த உடைகளால், தான் சாரணவேஷந் தரித்துக்கொண்டு, அரையோசனைதூரம் முன்னேபோய் அவர்களுக்கெதிர்முகமாக வந்து, எல்லோரையும், வணங்கி, 'வெற்றிபெறுவீராக' என்று கூறி, 'ஓ கல்விக்கடல் போன்றவர்களே! மிக்ககீர்த்தி பெற்றவர்களே! போசராசன்சபைக்குப் பிருகற்பதிகள்போன்ற நீங்களெல்லீரும் எங்கே செல்கின்றீர்? உங்களுடைய அரசன் சேமமாயிருக்கின்றானா? நீங்களெல்லீருஞ் சேமமாயிருக்கின்றீர்களா? யான் பொருளாசைகொண்டு அரசனைப் பார்க்கவேண்டுமென்று காசிபட்டணத்தினின்றும் வருகின்றேன்' என்ன, எல்லோரும், அவனைப் பரிகாசஞ்செய்துகொண்டே போனார்கள். அவர்களுளொருவன், அவ்வார்த்தையைக் கேட்டு அவனைச் சாரணனாகவே எண்ணி, 'ஓ! சாரண! இஃது பின்னர் உன்னாற் கேட்கப்படப்போகிற விஷயமேயன்றி வேறன்று. ஆதலால், அதை இப்பொழுதே சொல்லுகின்றேன்; கேள். அரசனாற் கொடுக்கப்பட்ட சமஸ்யையைப் பூரிக்கவல்லமையற்றவர்களாய்ப் பூபன்கோபத்துக்குப்பயந்துகொண்டு இப்புலவர்கள் தேசாந்தரம் போகின்றார்கள்' என்ன, சாரணன் 'அந்தச்சமஸ்யையைச் சொல்லும்' என்ன, அப்புலவன் அதைச்சொல்ல, சாரணன் 'இஃது மிக நன்றாயிருக்கின்றது. ஆனாலும், எளிதில் விளங்காத மறைபொருளையுடையது. நிறைமதிமண்டலத்தைப் பார்த்து வேதனாற் சொல்லப்பட்டதெனத் தோற்றுகின்றது. அதி

னும் இதுவே அதற்குத் தக்க மற்றோரடி’என்று “அனுமாத்திரமென்று வருணிக்கப்படுகின்றது; பிரதமையில் சந்திரன் அனுசரிப்பது எப்படி?” என்னுங்கருத்துநிறைந்ததைச் சொல்லக் கேட்ட யாவரும் பேராச்சரியமுற்றனர். சாரணனோ, அவர்களெல்லோரையுஞ் சேவித்துவிட்டுப் போனான்.

பின், அவர்களெல்லோரும், ‘ஆ! நம்மைக் காக்கும்பொருட்டு நாமகளே புருஷரூபங்கொண்டு வந்தாள் போலும். இஃது ஒருவருக்குந் தெரியாது. ஆகையால், விரைவாய் வீட்டுக்குச் சென்று பண்டங்களை இறக்கிவைத்துவிட்டுக் காலையிலேயே அரசனரண்மனைக்குப் போகவேண்டும். இல்லாவிடில், சாரணன் சொல்லிவிடுவான்’ என்று நிச்சயித்துக்கொண்டு தத்தம் மனைகளுக்குச்சென்று, பொழுதுவிடிந்தவுடன், வேந்தன்சபைக்குப் போய் அரசனுக்கு ஆசீர்வாதங்களைச் சொல்லிவிட்டுத் தத்தமிடங்களில் இருக்க, பாணன் எழுந்து, ‘தேவ! எல்லாமறிந்த வுன்னாற் சொல்லப்பட்டதைக் கடவுளன்றி மற்றெவர்தாம் அறிவர்? ஆயினும், இது அதற்குத் தக்கதாயிருக்கும்’ என்று அச்சாரணன் கூறிய வடியைச் சொல்ல, அதைக்கேட்ட நிருபன், அஃது தன்னெண்ணப்படி யிருக்கக் கண்டு, ‘காளிதாசன் எவ்வாற்றானும் வெகுசமீபத்திலேயே இருக்கிறான்; உபாயத்தால் எல்லாங்கைகூடும்’ என ஊகித்துக்கொண்டு, அந்தப் பாணனுக்குப் பதினைந்திலட்சம் பொன் கொடுத்து, புலவர் கூட்டத்தைச் சந்தோஷமுடையவன்போல் நன்குமதித்து அனுப்ப, அவர்களும், தங்கள் வீட்டுக்குப்போனவுடன், மன்னன், தனது வாயில்காப்போரை நோக்கி, ‘ஓ சேவகர்களே! சென்ற புலவருள் யாரேனும் நம்மரண்மனைக்குத்

திரும்பிவருவார்களாயின், அவர்களை யென்னுடைய வந்தப்
புரத்துக்கு அழைத்துக்கொண்டுவாருங்கள்' என்று சொன்
னான்.

அநந்தரம், வேந்தன் கொடுத்த செல்வமெல்லாவற்றையும் பாணன் தானொருவனே யெடுத்துக்கொண்டு போனதைப்பற்றிக் கடுங்கோபங்கொண்ட சிலர், அரண்மனையுட்புக்குத் தடையின்றி யரசனைப் பார்த்து எல்லாவற்றையுந் தெரிவிக்க, கேட்ட இறைவன், அவர்களை முன்னிட்டுக்கொண்டு, முன் காளிதாசன் சாரணவேஷத்தோடுவந்தத வின இடத்தை யடைந்து, கள்ளர்களின் காற்சுவடுகளைக் கண்டு அவர்களைப் பிடிக்கவல்ல சிலரை யழைத்து, 'நேற்றிரவு இவ்வழியாக ஒருவன்போனான்; அவனது அடிச்சுவடுகள் இன்னுந் தெரிகின்றன; அவற்றின்மூலமாய் அவனைக் கண்டுபிடியுங்கள்' என்றுகூறி, தனக்குச் சகாயஞ் செய்த ஒவ்வொரு புலவனுக்கும் ஒவ்வோரிலட்சங் கொடுத்துவிட்டுத் தன்னரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான்.

பிற்பாடு, அவர்கள் இராசன்கட்டளையை மேற்கொண்டு பலதிக்கிலுஞ்சென்று தேடிப்பார்த்தும் அம்மனிதனைக் காணாமன் மயங்கிநிற்கையில், ஒருவேலைக்காரி காற்செருப்பைக் கையிலேந்திக்கொண்டு எங்கிருந்தோவரப் பார்த்தவர்கள், அதைக் கபடமாகக் கேட்டுவாங்கி அவ்வடிச்சுவடுகளில் வைத்துப்பார்ப்ப வொத்திருந்தமையால் மனங்களித்தும், அப்பணிப்பெண் அச்செருப்போடு தாசியின் வீட்டில்நுழைந்தமையால் அம்மனிதன் அவ்வீட்டிலுளிருக்கிறனென்று ஊகித்துக்கொண்டும் திரும்பினவர்களாய்க் காவலனுக்கு நடந்தவற்றைத் தெரிவித்தார்கள்.

அச்சந்தோஷ வார்த்தையைக் கேட்ட விறைவன், பட்

டணத்தவர்களும் அமைச்சர்களும் புடைசூழக் காலால் நடந்து விலாசவதியின் வீட்டுக்கு வருவதைக் கேட்ட காளிதாசன், அவளை நோக்கி, 'இனியவளே! என்பொருட்டு எவ்வளவு துன்பம் உனக்குநேர்ந்தது; பார்' என்ன, அவள் 'நற்கவியே! ஒவ்வொருவருடைய மனநிலைமையையும் அளந்தறிவதற்கு வருந்துன்பமே கருவியாயிருப்பதன்றி வேறன்று; காற்று வீசாமலிருப்பின் பஞ்சுப்பொதிக்கும் பருவதத்துக்கும் வேற்றுமை யெவ்வாறுதெரியும்? நண்பர், நமர், சுற்றத்தார் ஆகிய இவர்களுடைய அறிவுமேன்மையையும், செல்வமேன்மையையும் அறிந்துகொள்வதற்கு, அடுத்தவர்களுக்கு வரும் ஆபத்தே உரைகல்லாம். உலகில், மனிதர்கள் விரும்பாமலிருக்கவுஞ் சுகமானது தன்னடைவேயெப்படி வந்து சேருகின்றதோ, அப்படியே துக்கமும்வந்து சேருகின்றது; அதைக்குறித்துச் சிந்திப்பானேன்? கவியே! அரசனால் உனக்கொருதுன்பம்வருமாயின் இந்தத் தாசியின்கூட்டத்தோடு நான் வளர்த்தோங்கியெரியும் நெருப்பில் வீழ்ந்து பிராணனை விட்டிடுவது உண்மையேயாம்' என்ன, காளிதாசன் 'இனியோய்! இவ்வாறு நினையேல். போசன், என்னைப் பார்த்து முகமலர்ச்சிகொண்டு என்காலில் வந்து விழப்போகிறான்' என்றனன்.

இவ்வண்ணம் இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், போசன், தாசியினது வீட்டினுள் நுழைந்து காளிதாசனைக் கண்டு பெருமகிழ்ச்சிகொண்டு அவனடியில்வீழ்ந்தெழுந்து, 'கவியே! கனவிலும்நனவிலும் போகையிலும்வருகையிலும் உன்னைவிட்டு என்மனம் வேறொன்றையும் நினைத்ததேயில்லை' என்ன, காளிதாசன், அதைக்கேட்டு நாணத்தால்முகங் கவிழ்ந்துகொண்டிருக்க, வேந்தன், அவனது முகத்தை நிமி

ர்த்து, 'ஓ! காளிதாசனே ! கலைகளுக் கிருப்பிடமானவனே!
'இராஜமார்க்கத்தில் நடக்கும் நீ, தாசனைப்போல் நடத்தப்ப
ட்டால், இதில் உனக்கென்ன நாணம்? அது மற்றவர்களுக்
கன்றோ! கிளியைக் கூட்டில் வைத்துக் காப்பதுபோல் உன்
னைத் தன்வீட்டில் வைத்துக்காத்த இவ்விலாசவதியே
பெருமை பெற்றவள்' எனச்சொல்லிக் காளிதாசன்கண்ணீ
ரைத் தன்கைத்தாமரையால் துடைத்து, அவனைத் தான்
பெற்றதற்காக வளவிறந்த பொருள்களைத் தானஞ்செய்து,
அவனைத் தன்பட்டத்துக்குதிரைமேல் இருத்திவைத்துக்
கொண்டு தன்னரண்மனைபோய்ச்சேர்ந்து முன்போல் உயிர்
நண்பனா யிருந்தனன்.

இப்படிச்சிலநாள் கழிந்தபின் ஒருநாள், வேந்தன், உப்
யானத்துக்குச் செல்லுகையில், தோற்கமண்டலுவைக்
கையிலெடுத்துக்கொண்டு வரும் ஒரந்தணனை யிடைவழி
யிற்கண்டு, 'அந்தணா! தோற்பாத்திரத்தைக் கையிற் றூக்
கிக்கொண்டு ஏன் திரிகின்றாய்?' என்ன, மறையவன், முகவொ
ளியாலும் இனியசொல்லாலும் தன்னைக்கேட்டவன் போச
னே யென்றறிந்துக்கொண்டு, 'தேவ ! கொடுப்பவர்களுட்
சிறந்த போசன் உலகத்தை யாள்கையில், செம்பு இரு
ம்பு ஆகிய இவை கிடைக்கின்றில; ஆகையாற்றான் தோற்
பாத்திரத்தைச் சுமக்கின்றேன்' என்ன, அரசன் 'போசன்
ஆண்டுகொண்டிருக்க, அவைகள் கிடையாமைக்கு ஏது
வென்?' என, வேதியன் "பகைவர்களுக்கு விலங்கிடவேதா
விரும்பும், சாசனபத்திரங்கள் செய்துகொடுப்பதாற் செம்பும்
ஆகிய விரண்டும் இப்போசனது அரசாட்சியிற் கிடையா வா
யின" என்னுங் கருத்தடங்கியசெய்யுளைச் சொல்ல, களித்த
வேந்தன் அட்சரத்துக்கு இலட்சந் தந்தனன்.

ஒருநாள், வாயிலோன், வந்து பணிந்து, 'காவல! தகப்பன் தாய் மகன் நாட்டுப்பெண் ஆகிய இன்னோர்சேர்ந்த ஒரு வித்துவத்குடும்பம் தூரதேசத்தினின்று வந்து வாயிலிற் காத்துக்கொண்டிருக்கின்றது' என்ன, நிருபன் 'ஆ! நாமகளின் அனுக்கிரக முறை மிகமேலானதே' என்ன, அச்சமயத்தில், யானைகாப்போன், வந்து ஏந்தலைத்தொழுது, 'போசேந்திர! சிங்களதேசத்தரசர், நூற்றிருபத்தைந்து யானைகளையும் பதினாறு மகாமணிகளையும் அனுப்பினர்' என்ன, அருகிலிருந்த பாணன், "கசேந்திரங்களின்நிலைமை கவிகளின்நிலைமை போன்றதேயாம்; அவை, தம்மிடத்திலாவது அரசன்மாளிகையிடத்திலாவது இருக்கப்பெறுவனவேயன்றி நாய்கள்போல ஒவ்வொருவீட்டுவாயிலினும் நிற்பனவல்ல" என்னுந் தாற்பரியமமைந்த செய்யுளைச் சொல்ல, செவியுற்ற வேந்தன், அந்த யானைகளைப் பார்க்க மேன்மாடத்து வெளியில் வந்தான்.

அக்காலத்தில், அங்குவந்த சோளபண்டிதன், வாயில் வெளியில் நிற்கும் அந்தவித்துவத்குடும்பத்தைப் பார்த்து 'நான் அரசனுக்கு மிகவும் பிரியன்' என்னுஞ் செருக்கை மேற்கொண்டவனாய், 'அரச! யான் தடையின்றி யரண்மனை மேன்மாடத்துக்கு வந்துவிட்டேன். அந்த வித்துவக்குடும்பமோ வாயிலிலேயே நின்றுகொண்டிருக்கின்றது' என்ன, ஏந்தல், அவனது செருக்கின் பிருதியைக் கண்டு அவனை வெளிப்படுத்திவிட்டு, வாயிலிலிருந்த வித்துவக்குடும்பத்தை யங்கு வரவழைத்து, அக்குடும்பத்துக்குத் தலைவனான கிழவந்தணனைக் கண்டு, "பெரியோர்களுக்குக் காரியசித்தி மகிமையினாலுண்டாகின்றதேயன்றிக் கருவியினாலன்று" என்னும்பொருள் வாய்ந்த ஓரடியைச்செய்து கொடுத்து, "மற்றைய அடிகளையுஞ் செய்துமுடியும்' என்ன, அந்தணன்

"பிறப்பிடம் மட்பானை; மிருகங்கள் பரிசனங்கள் ; மரவுரி ஆடை; வசிக்குமிடம் காடு ; காய் கிழங்குமுதலியன உணவுகள் ; இப்படிப்பட்ட தன்மையையுடைய அகத்தியர், கடலைக் கையால் முகந்துண்டனர் ; என்றால்" என்னுந் தாற்பரியங்கொண்ட மற்றை யடிகளையுஞ் செய்து, "பெரியோர்களுக்குக் காரியசித்தி மகிமையினாலுண்டாகின்றதேயன்றிக் கருவியினா லன்று" என்ற வதனோடு பொருத்திச்சொல்ல, அண்ணல், விலையுயர்ந்த அப்பதினாறுமகாமணிகளையும் அவற்குத் தந்தனன்.

பிறகு, அவனதுமனையாளை நோக்கி, 'தாயே! நீரும் அதனைப் பூரித்துச்சொல்லும்' என்ன, அவள் "தேருக்குச் சக்கரம் ஒன்று; பாம்பைக் கடிவாளமாகப் பூண்ட குதிரைகள் ஏழு ; வழியோ ஆதாரமின்றியிருப்பது ; சாரதியோ முடவன்; இப்படிப்பட்ட தன்மையையுடைய சூரியன் தினந்தோறுங் கரையற்றவாகாயத்தினது அந்தத்தைச் சுற்றிவருகிறான்" என்னுங்கருத்துக்கொண்ட மற்றையடிகளையுஞ் செய்து, "பெரியோர்களுக்குக் காரியசித்தி மகிமையினாலுண்டாகின்றதேயன்றிக் கருவியினா லன்று" என்ற வதனோடு பொருத்திச்சொல்ல, வேந்தன், சந்தோஷித்து அவளுக்கு ஏழுயானைகளையும், ஏழுதேர்களையும் அளித்தனன்.

அதன்மேல், அவர்களுடையகுமாரனை நோக்கி, 'நீரும் அவ்வாறே முடியும்' என்ன, அவன் "சயிக்கவேண்டியதோ இலங்கை; காலினால் தாண்டத்தக்கதோ சமுத்திரம் ;பகைவனோ இராவணன்; போர்க்களத்தில் உதவிசெய்பவர்களோ வானரர்கள்; தானோ காலாள் ; மனிதன் ; இத்தன்மையுள்ள இராமன் அரக்கர்குலங்களெல்லாவற்றையும் மடித்தனன்" என்னும் அபிப்பிராயங்கொண்ட மற்றையடிகளையுஞ்செய்து,

"பெரியோர்களுக்குக் காரியசித்தி மகிமையினாலுண்டாகின் றதேயன்றிக் கருவியினா லன்று" என்ற வதனோடு பொருத்திக்கூற, இறைவன், ஆநந்தித்து அவனுக்குப் பதினெட்டி யானைகளைக் கொடுத்தனன்.

அதன் பின்பு, மனிதவுருக்கொண்ட சரச்சுவதிபோல விளங்கும் அவ்விப்பிரகுமாரனது மனையாளைப் பார்த்து, 'அம்மை! நீருஞ்சொல்லும்' என்ன, அவள் "வில்லோ பூ, நாணோ வண்டின் கோவை ; பாணமோ சஞ்சலமுற்ற கண்களைப்பெற்ற பெண்களின் கடைக்கணோக்கம்; சினேகிதனோ ஜடாத்துமாவான சந்திரன்; தானோ ஒருவன்; சரீரமில்லாதவன் ; இத்தன்மையுற்ற மன்மதன் எல்லாவுலகங்களையுங் கலக்குகிறான்" என்னுந் தாற்பரியம் பூண்ட மற்றையடிகளையுஞ் செய்து, "பெரியோர்களுக்குக் காரியசித்தி மகிமையினாலுண்டாகின்றதேயன்றிக் கருவியினா லன்று" என்ற வதனோடு பொருத்திக்கூற, ஆச்சரியமுற்ற வரசன், அவளுக்குத் தன் மனையாளின் ஆபரணங்களெல்லாவற்றையுந் தந்தனன்.

ஒருநாளிரவில் அரசன், தானொருவனாக அங்கங்கே நடக்கும் வியாபாரங்களையும் அவரவர்கள் சொல்லிக்கொள்ளும் பேச்சுக்களையும் கண்டுங் கேட்டுமறியத் தன்பட்டணத்தில் திரிந்துகொண்டே யொருவணிகன்வீட்டுக்குச் சமீபத்தில் வர, அப்போது அம்மனையினுளிருந்த வணிகன், தன்மனையாளை நோக்கி, 'காதலியே! நம்மரசன் அற்பதானங்களைச் செய்துகொண்டு உச்சயநகரத்துக்கதிபனான விக்கிரமார்க்கனுடைய கொடைப்புகழை விரும்புகின்றான்; அஃது இவனுக்குண்டாகுமா? தோத்திரஞ் செய்வதிற் கைதேர்ந்த மயூரன்முதலிய கவிகள்சிலர், இவனுக்குப் பெருமையை யுண்டாக்கினர்; இல்லாவிடின் போசன்போசன்றான். இனிபளே!

நாய்க்குக் கிருத்திரிமமான கேஸரம் நகங்கள் முதலியவைகளைக் கட்டிநிறுத்தினாலும் அது, மதம்பிடித்த யானைகளின் மத்தகத்தைப் பிளக்கவல்ல மிருகேந்திரனாய்விடுமோ? நான்முகனுக்குள்ள பெருமை குயவனுக்கு வருமாயின், விக்கிரமார்க்கனுக்குள்ளமகிமை போசனுக்கு வரும்' என்ன, அதையுற்றுக்கேட்ட பூபாலன், 'இவன் உண்மையையே சொல்லுகின்றான். உலகத்திற் சனங்கள் தத்தம் வீடுகளில் அச்சமின்றிச் சத்தியத்தையே சொல்லிக்கொள்ளுகிறார்கள். விக்கிரமார்க்கனுக்கு உண்டாயிருக்கும் புகழை, நானாவது இன்னும் மற்றையவர்களாவது அடைய வல்லேமோ?' என்று நினைத்துக்கொண்டு தன்னுடைய வரண்மனைபோய்ச் சேர்ந்தான்.

போசன், பெருங்கொடையாளனாய்ச் செல்வச்செலவு செய்து வருதலைக் கண்ட முக்கியமந்திரி, நேரிற்சொல்லச் சக்தியற்றவனாய் அரசனது படுக்கையறையின்சுவரிலே "ஆபத்துக்காகப் பொருளைக்காக்கவேண்டும்" என்னுங் கருத்துக்கொண்ட வோரடியை யெழுதிவைக்க, அதைக்கண்ட வேந்தன் "ஸ்ரீமான்களுக்கு ஆபத்து எப்படி யுண்டாகும்?" என்னும்பொருள்சேர்ந்த மற்றோரடியையெழுத, வந்தபார்த்தவமைச்சன் "இலக்குமி நீங்கிப்போய்விட்டால்" என்னுங் கருத்துக்கொண்ட வேறோரடியை யெழுத, மற்றைநாள், அதைக்கண்ட வேந்தன் "புதைத்துவைத்த பொருளும் போய்விடுகின்றது" என்னும் பொருள்சேர்ந்தவடியை யெழுதிமுடித்துவிடவே, முக்கியமந்திரிக்கு மிகுந்தவெட்கமுண்டாய், 'என்பிழையைப் பொறுத்துக்கொள்ளும்' எனச் சொல்லி, அவன், அவ்விறைவன்றாளில் வீழ்ந்துதொழுதனன்.

சிலநாளைக்குப்பின் ஒருநாளிரவில், அரசனது சயனவிரு

கத்துக்குச் சமீபத்திலுள்ள பணவறையிற் கன்னம் வைத்து உள்ளேசென்ற வொருதிருடன், அங்குள்ள பலவகையான இரத்தினங்களைத் திருடுகையிற் கடவுளருளால் திடீரென்று வைராக்கியமடைந்து, ‘இவை பரலோகக் கடன்களே. அன்றியும், உலகத்தில் மனிதர்களாய்ப் பிறந்தவர்களில், சிலர் உடற்குறையுள்ளவராகவும், சிலர் குஷ்டமுதலிய நோய்களை யனுபவிப்பவராகவும், சிலர் குருடராகவும், சிலர் மூடவராகவும், சிலர் தரித்திரராகவும் இருப்பதற்கு முற்சன்மத்தில் அவரவர்செய்த வினையின்பயனே காரணமாம்’ என்று சிந்திக்கையில், அடுத்த வறையிற் படுத்திருந்த வேந்தன், இடையிருளில் விழித்துக்கொண்டு, தனக்குள்ள இராச்சியபாரகௌரவத்தை நினைந்து பூரித்து, “மனைவியர் மனக்கினியர்; நண்பர் அனுகூலர்; சுற்றத்தோர் மிகநல்லவர்; சேவகர் அன்பு நிறைந்தவர்; யானைகள் மதக்களிப்பாற் பிளிறுத லுடையன; குதிரைகள் விரைவான நடையுடையன” என்னுந் தாற்பரியங்கொண்ட மூன்றடிகளைச்சொல்ல, நான்காவதடி அரசன்முகத்தினின்று வெளிப்படுவதன்முன்னமே அத்திருடன் “கண்ணை மூடிக்கொண்டால் ‘ஒன்று மில்லையன்றே!” என்னும் பொருள்சேர்ந்த கடைசிபடியைச் சொல்ல, அதைக்கேட்ட விறைவன், உடனே யவ்வறைக்குப்போய் அவனைப்பார்த்து மிகவுங்களித்துத் தன் வீரவலயத்தை யவனுக்குப் பரிசாகக் கொடுத்தனன்.

திருடனோ, அதைப் பெற்றுக்கொண்டுபோய் எல்லாக் கலைகளிலும் வல்லுனன வோரந்தணனது வீட்டில் நுழைந்து, அவனையெழுப்பி, ‘அந்தணரே! இஃது அரசனது தோள்வளை; மிக்கவிலை பெறப் பெற்றது. இதை யற்பவிலைக்கு விற்றுவிடாமற் றக்கபடி விற்றுப் பொருள்பெற்று வாழ்ந்திருய்’ என்று சொல்லிக் கொடுத்துவிட்டுப் போயினன்.

அதைப் பெற்றுக்கொண்ட அவ்வேழைப்பிராமணன், மற்
றைநாள், கடைக்குச்சென்று அதையவ்வாறே விற்று, அப்
பொருளுக்குத் தனக்குவேண்டிய வாடையாபரணங்களை
வாங்கிக்கொண்டிருக்க, கண்ட காவற்சேவகர் அவனைப்
பிடித்துக்கொண்டு, 'அந்தண! நேற்றுவரை யுண்ண அன்
னமுங் கிடையாது வருந்திய வுனக்கு, இன்று காலையிலேயே
யிவ்வளவு பொருள்கள் எப்படிக்கிடைத்தன?' என்று வெரு
ட்டி யிழுத்துக்கொண்டுபோய்ப் போசராசனது முன்பே
விட்டு நடந்ததைக்கூற, கோமகனும் அவனைப் பார்த்து
அவ்வாறே கேட்க, அவ்வந்தணன், "தவளைகள் தவிக்கவும்
ஆமைகள் அழுங்கவும் மீன்கள் வாடவும் நீர்வற்றிக்கிடந்த
குளம், அகாலத்திற் பெய்த மழையால் யானைகள் மூழ்கி
விளையாடும்படி நீர்நிறைவைப் பெற்றது" என்னுங் கருத்த
மைந்த பாட்டினைச்சொல்ல, அரசன், சந்தோஷித்துத் தோ
ள்வளை சோரனால் இவனுக்குக் கொடுக்கப்பட்டதென்று நிச்
சயித்துத் தானும் ஓரிலட்சந் தந்தனன்.

வேறொருநாள், கவிகளுட் சிறந்தவனான விஷ்ணு
வென்னும் பெயரையுடைய வோர்கவி, அரசனது வாயிலில்
வந்து உட்புகுவிக்கப்பெற்று வேந்தனைநோக்கி யாசிர்வதித்
துப் பின், "தாராதிபனே! பூமியையாளும் அரசர்களை யெண்
ணி நினைத்த இந்தப்பிரமன், உன்னை முதலிலெண்ணி, அத
ற்கு அடையாளமாக மாக்கல்லினால் எந்தக் கீற்றைக் கீறின
னோ, அதுதான் தேவகங்கை யாயிற்று. உனக்கிணை
யான வரசன் வேறொருவனு மில்லாமையால் அக்கல்லைக்
கீழெறிந்துவிட்டான்; அது, இந்நிலவுலகத்திற் பனிமலை
யாயிற்று" என்னுங் கருத்து நிறைந்த செய்யுளைச்சொல்ல,
காவலன், அதைக்கேட்டு, இவனுக்கு என்ன கொடுக்கலா

மென்று ஆலோசித்துக்கொண்டிருந்தனன்.

அந்தச்சமயத்தில், அரசன் சமீபத்திலிருந்த சோமநாதனென்னுங்கவி, அச்செய்யுளின்சிறப்பை நோக்கித் தன்முகவொளியிழந்து வருந்திப் பொறாமைகொண்டு பூபனைக்கிட்டி, 'தேவ! இவன் நல்லகவிதான்; மிக்கதரித்திரத்துக்கு உறைவிடமானவன்; ஒருபோதும் இராஜசபையைப் பார்த்தவனல்லன்; இவனுக்கோ கட்டிக்கொள்ளக் கோவணமுமில்லை' என்ன, நிருபன், 'செய்யுள் குறைபாடின்றியிருப்பின் செய்தோன் வறியனா யிருப்பினு மென்னை? இரப்போன் கையி லிருப்பின் கரும்பு தன்சுவை மாறி நிற்குமோ?' என்று பேசி எல்லோர்க்குந் தாம்பூலங் கொடுத்துவிட்டுச் சபையினின்றெழுந்தனன். அங்குள்ள புலவர்களும், எழுந்து போகும்போது, 'இன்று விஷ்ணுகவிகூறிய பாட்டைக் கேட்ட சோமநாதகவி, அக்கவியின்விஷயத்திற் றன்னுடைய வியற்கையான கொடுந்தன்மையைக் காட்டினன்' என்று சொல்லிக்கொண்டே போயினர்.

அதைக்கேட்ட விஷ்ணுகவி, மனநொந்து வாடி ஓர் செய்யுளெழுதி அதைச் சோமநாதகவியின்கையில் வைத்துத் தன்னிடத்திற்குப் போகநிற்கையில், அதை அக்கவி வாசித்துப்பார்க்க, அதில் "ஆ! இளங்காற்றினான் மோதப் பெற்றெரியுங் காட்டுநெருப்பினால் இம்மரங்கள் எரிக்கப் பட்டுக்கொண்டிருக்கையில், ஓ! மேகமே! நீ யருள்செய்து மழையைப் பெய்யாவிட்டாலும் இடியையாவது இவைகளின் மேல் விழவிடாமற் செய்யலாகாதா?" என்னுந் தாற்பரிய மமைந்திருக்கக் கண்டு கண்கலுழ்ந்து அவ்விஷ்ணுகவிக்குத் தன்னிடத்துள்ள வெல்லாப்பொருள்களையுங் கொடுத்துவிட்டான்.

அவன், அவற்றை யெடுத்துக்கொண்டு தன்னூர்க்குப் போய்க்கொண்டிருக்கையில், வேட்டைக்குப் போய்வரும் நரபதி, வழியில் அவனைக் கண்டு, 'நான் இவனுக்கு உண்ண அன்னமுங் கொடுக்கவில்லை; அப்படியிருக்க விவ்வளவு பொருள்கள் எப்படிக் கிடைத்தன?' என்று சிந்தித்து, 'விஷ்ணுகவியே! இவ்வளவுபொருள்கள் உனக்கு எப்படிக்கிடைத்தன?' என்ன, அக்கவி 'அரசர்க்கரசனே! உன்வீட்டுப் பிச்சைக்காரனாகிய சோமநாதன், எனக்குக் கற்பகதருவா யிருந்தனன்' என்று சொல்ல, தோன்றல், முன் இவன்சபையிற் சொன்ன பாட்டுக்குரிய வட்சரலட்சத்தையும் அப்போழ்தே கொடுத்துவிட்டு, சோமநாதகவியையும் மிகவியந்து அவனுக்கும் விசேஷ சம்மானம் பண்ண, அதைக்கண்ட சோமநாதகவி, "காரணமில் கருணையையுடைய மேகமானது, மழைபெய்யாமற் போகுமாயின் காட்டிலுள்ள மரங்களுக்குத் தளிரேது? பூவேது? பழமேது?" என்னுங் கருத்தமைந்த பாட்டைச்சொல்ல, அதைச்செவியுற்ற சீமந்தகவி, "ஆதிசேடன் எல்லாவுலகங்களையுந் தனது படங்களாற் றாங்குகின்றான்; அவனை யாதிகூர்மந் தனது முதுகிற் றாங்குகிறது; அதனைச் சமுத்திர மோர்புறத்திற் றாங்குகிறது; இவற்றை யாலோசிக்குங்கால், பெரியோர்களின் சரித்திரச்செல்வங்கள் எல்லையற்றவைகளா யிருக்கின்றன" என்னுந் தாற்பரியங்கொண்ட பாட்டைக் கூற வரசன் மிகவுங் களித்தனன்.

ஒருநாள், போசன், சிவதரிசனத்துக்காகக் கோயிலுக்கு வர, அங்குவந்த வொருபிராமணன், அரசனைப்பார்த்து, "சிவனுடைய உருவத்திற் பாதி விஷ்ணுவினாலும் பாதி பார்வதியினாலும் அபகரிக்கப்பட்டு உலகத்திற் சிவனே யில்லை

யாய்விடவே, அவனிடத்துள்ள கங்கை சமுத்திரத்தையும், பிறைச்சந்திரன் ஆகாயத்தையும், ஆதிசேடன் பாதலத்தையும், எல்லாமறிதல் இறைவனாயிருத்தல் ஆகிய இவை உன்னையும், பிச்சைக்குத்திரிதல் என்னையும் வந்தடைந்தன" என்னும் பொருள்கொண்ட பாட்டைச்சொல்ல, இறைவன் அட்சரலட்சந் தந்தனன்.

ஒருநாளிரவில் அரசன், வேற்றுவேடத்தோடு தாராநகரத்திற் றிரிந்துகொண்டே யொருவீட்டுவாயிலில் வந்துநின்று, அதனுள் அழுதுகொண்டிருக்கு மொருத்தியைக் கண்டு, அவளருகிற்போய், 'அம்ம! நீஅழக் காரணமென்ன?' என்ன, அவள் 'கிழவரான வெனது பர்த்தா கட்டிலிலிருக்கிறார்; வீடோ தம்பமாத்திரத்தோடே நிற்கின்றது; வரப்போகிறதோ கார்காலம்; தேசாந்தரம் போன பிள்ளையினுடைய சேமசமாசார மொன்றுந்தெரியவில்லை; எனது மருமக்களோ பிள்ளைபெறுந் தருவாயி லிருக்கிறாள்; அதற்காக நான் இருந்து கொணர்ந்துவைத்த எண்ணெய் கீழே கொட்டிப்போய்விட்டது; இவற்றுக்காகவே நான் அழுகின்றேன்' என்று சொல்ல, கேட்ட கருணைக்கடலாகிய வேந்தன் அவளுக்கு இலட்சந் தந்தனன்.

வேறொருநாளிரவில், மன்னன், சந்திரமண்டலத்தை நோக்கிக்கொண்டுநின்று அதனுட்டோன்றும் களங்கத்தைப் பார்த்து, "சிலர் இதை அங்கமென்று சந்தேகித்தார்கள்; சிலர் இதைக் கடலினது சேறென்று நினைத்தார்கள்; மற்றுஞ்சிலர் மானென்று சொன்னார்கள்; பின்னுஞ்சிலர் பூமியினது நிழலென்று கொண்டார்கள்" என்னுங் கருத்துக்கொண்ட இரண்டடிகளை யெழுதிக் காளிதாசன் கையிற் கொடுப்ப, அவன் அப்போதே "சந்திரனிடத்தில்

ளது, அறுத்த இந்திரநீலக் கல்லின் கூறுபோற் கருமையாகத் தெரிகின்றதோ, அதை, இரவிற்குடித்த வயிற்றினுள்ள நெருங்கிய விருளென்றே யாம் சொல்லுகின்றோம்'' என்னுந் தாற்பரியங்கொண்ட மற்றைய விரண்டடிகளையு மெழுதிக் கொடுக்க இறைவன், அவ்வடிகளுக்கு அட்சரத்துக்கிலட்சம் விழுக்காடு கொடுத்தனன்.

பலதினங்களுக்குப் பின் ஒருதினத்தில், போஜமகாராஜன், குதிரைமீது ஏறிக்கொண்டு போகையில், வழிக்குச் சமீபத்தில் ஓராலமரத்தின்கீழ் ஒருதவமுனியைக் கண்டு குதிரையினின்றுமிறங்கி, அவனது சமீபத்திற்போய், 'ஓ! பெரியோரே! உம்மைப்போன்றவர்களின் தரிசனம் எம்போலியர்க்குக் கிடைப்பது எளிதோ? உம்முடைய இருப்பிடம் எது? உமக்குத் தினந்தோறும் பிச்சை இடுபவர் யாவர்?' என்றுகேட்க, அத்தபோநிதி, 'வேந்தே! காடுகடோறும் பழங்கள் எளிதாய்க் கிடைக்கின்றன; அங்கங்குள்ள பரிசுத்தமான நதிகளில், இனிமையுந் தண்மையும் வாய்ந்த நீர் தன்னடைவேயமைந்திருக்கின்றது; தளிர்களும் கொடிகளும் இலைகளும் மென்மையாய்ப் படுக்கைகளா யிருக்கின்றன; ஆகையால், உலோபிகள், செல்வர்களின் வீட்டுவாயிலிற் கஷ்டத்தைப் பொறுத்துக் காலங்கழிப்பதுபோல், நாங்கள் ஒருவரையும் எதிர்பார்க்கவேண்டியவர்களல்லேம்' என்றுகூற, அரையன் அவர்தாளில் வீழ்ந்துபணிந்தனன்.

வேறொருநாள், காவலன் சிங்காதனத்தை யலங்கரித்திருக்கையில், வாயிலோன், வந்து பணிந்து, 'ஐய! திசை[illegible]த்தினின்று வந்த வொரு புலவனென பிரமசாரி வாயிலிற் காத்துக்கொண்டிருக்கின்றான்' என்ன, மகிபன், 'உட்புகுவி' என்ன, வந்த அன்னோன், அரசனை யாசீர்வதிக்கத்

தோன்றல் 'அந்தணா! நீ வாலிபனே; கலிகாலத்துக் கொத்த தான நினது விரதந்தா னென்ன? நாடோறுஞ்செய்துவந்த உபவாசத்தினால் வாடியிருக்கின்றாய்; சிறந்த வந்தணனொருவனுடைய கன்னிகையை யுனக்குக் கலியாணஞ்செய்விக்கிறேன்' என்ன, அப்பிரமசாரி 'தோன்றால்! நட்பினர் மான்கள்; மலைக்குகை வீடு; சாந்தி இனியளான மனையாள்; உணவு காட்டிலுள்ள காய் கிழங்கு பழங்கள்; மரவுரி சிறந்த வுடை; சிவனடியார்களாய்த் தவஞ்செய்துகொண்டிருக்குமென்னைப்போன்றவர்களுக்கு விரதத்திலேயே யாசையன்றி மோட்சவுலகத்தும் ஆசை செல்வதில்லை' என்றுபேச, இறைவன், எழுந்து பணிந்து, 'ஐய! யான் செய்யவேண்டியது என்ன?' என்ன, மாணவகன் 'நின்சபையிலுள்ள எல்லாப்புலவர்களையும் தங்கள்தங்கள் மனைவிமார்களோடு காசியாத்திரை செய்துவரும்படி என்னோடு அனுப்புவையாயின் அக்கோட்டியின்சிறப்பாற் களித்துக்கொண்டு செல்வேன்' என்ன, வேந்தனும், அவ்வாறே எல்லோரையு மனுப்ப, அவர்களும் அரசன்கட்டளையை மறுக்க வஞ்சிக் காசிக்குச் சென்றார்கள்.

காளிதாச னொருவன்மாத்திரஞ் செல்லாதிருக்கக் கண்டு வேந்தன் 'எல்லாப்புலவரும் என்கட்டளையைத் தலைமேல்வைத்து நடக்க, இவனொருவன்மாத்திரம் அவ்வாறுசெய்யாமைக்குக் காரணம் விலைமகள் விருப்பமே' என்று எண்ணிக் காளிதாசனை யலட்சியஞ் செய்ய, கண்டவவன், உடனே யந்நகரை விட்டுப்போய், அல்லாளதேசஞ் சேர்ந்து, அவ்வரசனால் ஆதரிக்கப்பெற்று அங்கேயே இருந்தனன்.

புலவரொருவருமின்றிப் பூபதி தனியேயிருக்குஞ்சமயத்தில், மாகனென்னு மொருபுலவன் தன்மனைவியோடு அந்

நகரத்துக்கு வந்து, தான் அந்நகரத்துக்கு வெளியிலிருந்து கொண்டு, ஒரு பாட்டெழுதி, அதைத் தன்மனைவிகையிற் கொடுத்து இராசசபைக்கனுப்ப, அவளுஞ் சபைக்கு வந்து அதை யிறைவன்கையிற் கொடுப்ப, அவன், அதை வாசித்துப்பார்க்க, அதில், "ஆம்பற்காடு ஒளியிழந்தது; தாமரை சோபையுற்றது ; கோட்டான் களிப்பிழந்தது; சக்கரவாகம் அன்புநிறைந்தது; சூரியன் உதயத்தைப்பெற்றான், சந்திரன் அத்தத்தைப்பெற்றான்; ஆ ! விதிவசத்தின்விளைவு விசித்திரமே!" என்னுங்கருத்தமைந்திருக்கக் கண்டுகளித்து அதற்கு மூன்றிலட்சங்கொடுத்து அவளைப்பார்த்து 'அம்ம! இவை உணவுக்காகக் கொடுக்கப்பட்டன ; காலையில் அங்கு வந்து அவரை நிறைந்த கருத்தினராகச் செய்வேன்' என்று சொல்லியனுப்ப, அவள் அவற்றை யெடுத்துக்கொண்டு போகையில், வழியில் யாசகர்சிலர், தன்னுடைய நாயகனது சிறந்தகீர்த்தியை வருணித்துச் சொல்லக் கேட்டு, அவற்றை யெல்லாம் அவர்களுக்குக் கொடுத்துவிட்டு, வெறுங்கையோடுபோய்த் தன்பர்த்தாவை நோக்கி, 'நாத ! உம்மால் எழுதப்பெற்ற பாட்டினைப் பார்த்துச் சந்தோஷித்த வரசனாற் கொடுக்கப்பட்ட செல்வமெல்லாவற்றையும் உம்முடையகுணங்களைப் பலபடிப்படவருணித்த யாசகர்களுக்கு இடைவழியிலேயே கொடுத்துவிட்டேனென்று கூற, நாயகன் 'தேவி! நன்றாய்ச் செய்தாய். ஆனாலும், இப்போது இங்குவரும் யாசகர்களுக்குக் கொடுக்க வொன்றுமில்லையே!' என்று விசாரப்பட்டுக் கொண்டிருக்கையில் அவனைப் பார்த்த யாசகருள் ஒருவன், "ஓ முகிலே ! நீ! சூரியகிரணத்தினால் தபிக்கப்பட்டமலைகளின்கூட்டங்களை யாற்றியும், காட்டுநெருப்பால் வாடிய மரங்களைத் தளிர்ப்பித்தும் எண்ணிறந்த பலநதிகளையும் நதங்களையும் நிறைத்தும் வறுமை

புற்றனை; ஆனாலும், நினது புகழுக்குக் குறைவில்லை" என்னும் பொருளமைந்த பாட்டைக்கூற, கேட்டமாகன், தன்மனைவியை நோக்கி, 'தேவி! கையிற் பொன் இல்லை; துராசை யென்னைவிட் டொழியவில்லை; என்மனமோ கொடையிலேயே விருப்புற்று நிற்கின்றது; யாசிப்பதோ இழிவு; பிராணனை விடுவதென்றாற் பாபம் விளையும்; கோவென்று அழுவதினாற் பிராணன் தானே போகிறதா? மேலும், இரப்போருடையகுறையை நீக்கமாட்டாத உயிர் இருந்து உடா போக மென்ன?' என்று சொல்லிக்கொண்டே பரலோக மடைந்தனன்.

அச்செய்தியறிந்த புரவலன், தானே அவ்விடத்துக்குச் சென்று அப்பண்டிதனுக்குச் செய்யவேண்டியவைகளையெல்லாஞ் செய்ய, அப்பண்டிதன்மனையாள் நாயகனோடு நெருப்பில் விழுந்து உயிர் துறந்தனள். அரசனே அவர்களுக்குச் செய்யவேண்டிய மற்றைக்கடன்களையும் மகன்போற் செய்து முடித்தனன்.

வேந்தன், தன்னூர்க்கு வந்த சிறந்தபுலவனிறந்ததனாலும், காளிதாச னூரைவிட்டுப்போனதனாலும், மற்றைப் புலவர்கள் தேசாந்தரம் போயிருப்பதனாலும் மிக்க துன்பங்கொண்டு இருட்டினபக்கத்துச் சந்திரன்போற் றேய்ந்துவர, கண்ட அமாத்தியர், ஒரு நிருபம் எழுதி அதைத் தங்களிலொருவன்கையிற்கொடுத்து அல்லாளதேசத்துக்கு அனுப்ப வவனும், அத்தேசத்தையடைந்து காளிதாசனைக் கண்டு அதைக்கொடுக்க, அவனும், அதை வாசித்துப் பார்க்க, அதில், "இளங்குயிலே! தேமாமரத்தின்மேல் வெகுநாள் விளையாடிக்கொண்டிருந்து இப்போது அதைவிட்டு வேற்று மரத்தின்மேல் வந்திருக்க வெட்கமுறுகின்றிலையா?

நீ தேமாமரத்திலிருக்கையில் உன்சொல்லுக்கு எவ்வளவு அழகுண்டாயிருந்ததோ, அவ்வளவு அழகு கருங்காலி மரத்திலும் பலாசமரத்திலுமிருக்கையி லுண்டாயிருக்கிறதா? என்பதை யாலோசித்துப் பார்'' என்னுங் கருத்தமைந்திருப்பதை யறிந்து, உடனே யந்நாட்டரசனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மாளவதேசம்போய், அரசனது விளையாட்டுச்சோலையின்கண் இருந்தனன்.

காளிதாசன் தன்னுடைய வுய்யானத்தில் வந்திருக்குஞ் செய்தி செவியுற்ற செம்மல், பரிசனர் புடைசூழ்ந்துவரப் போய் அவனை யழைத்துக்கொண்டுவந்து விசேஷசம்மானம் பண்ணினன்.

காளிதாசன் வந்துசேர்ந்த சிலதினங்களுக்குள்ளேயே, காசியாத்திரைபோயிருந்த புலவர்களெல்லோரும் வந்து நிறைந்தனர். அதுமுதல் போசமகாராசனது சபை முன்போல விளங்கிவந்தது.

பின்னொருதினம், இறைவன், தாராநகரத்திலொருவனாகத் திரிந்துகொண்டே, ஒருவிப்பிரனுடைய வீட்டுவாயிலில் வந்துநின்று, உள்ளே மகாபதிவிரதையானவொருத்தி தன் மடியில் தன்நாயகன் படுத்துறங்கத் தான் அவற்கு உபசாரஞ் செய்துநிற்கையில், அண்டையிற் படுத்துத்தூங்கிக் கொண்டிருந்த வவள்குழந்தை விழித்தெழுந்து தவழ்ந்து கொண்டேபோய்ச் சமீபத்திலிருக்கும் நெருப்பில் விழ யத்தனிக்கக் கண்ட வவள், 'தன்பதியை யெழுப்பின் பாபம் வரும்' என்றெண்ணி, 'அவ்வக்கினிதேவனை நோக்கி,' யக்கி யத்துக் கதிபனே! எல்லாத்தொழில்களுக்குஞ் சான்றானவனே! நீ யெல்லாவறங்களையும் நன்று யறிகின்றாய்; நான் கணவனுக்குச் செய்யவேண்டிய வுபசாரத்தில் நோக்குடை

யவளா யிருப்பதறும் குழந்தையை யெடுக்க வசக்தை
யிருக்கின்றேன் ; ஆகையால், நீ யென்குழந்தையைத் த
சாமற் காப்பாற்றவேண்டும்' என்று பிரார்த்தித்துநிற்
யில், அக்குழந்தை யூர்ந்துசென்று அந்நெருப்பில் வீ
தும் வருந்தி யுலாவிக்கொண்டிருந்தது.

அப்போது திடீரென்று விழித்துக்கொண்ட வவ
கணவன் குழந்தை நெருப்பிடையிருக்கக் கண்டு விரை
போய் எடுத்துக்கொள்ள, வேந்தன் பார்த்து ஆச்சரிய
ற்று, 'இப்படிப்பட்ட பதிவிரதை யென்பட்டணத்தில் வசி
ற்கு நான் முற்சன்மத்தில் என்ன பாக்கியம் பண்ணினே
என்று சொல்லிக்கொண்டே யரண்மனைக்குப்போய், மற்
நாட் காலையிற் சபைக்கு வந்து காளிதாசனைப் பார்த்
"அங்கி சந்தனச் சேறென வாயதே" என்னும் நான்கா
அடியைச்சொல்ல, காளிதாசன் உடனே யதற்கேற்ற மு
றடிகளைச் செய்து, அரசனை நோக்கி,

"அங்கு ழந்தைய னல்விழக் கண்டுநன்
னங்கை தன்னுயிர் நாதனுக் கோதில
வங்க வள்பதி பத்தியி னாற்றலா
லங்கி சந்தனச் சேறென வாயதே"

என்று பூரித்துப்பேச, அரசன் கேட்டு மிகவும் வியந்தன

பலதினங்களுக்குப்பின் ஒருநாள், வேட்டைமேல்
ப்புறப்ப வேந்தன், காட்டிற் சென்று வேட்டையாடி யயர்
ஒருகுளத்தின் கரையிலுள்ள நாவன்மரத்தின்கீழ்ப் படு
க்கொள்ள வப்போது, அம்மரத்தின்மேல் ஒரு குரங்கு
யதன்கிளையை யசைத்துப் பழங்களை யுருக்க, அவை சத்
துடன் நீரில் வீழ்வதைக் கண்டுகொண்டே யிரண்டுநாழி
யளவு அங்கேயேயிருந்து, மீண்டுந் தன்பட்டணஞ் சேர்

சபைக்கு வந்து, முன்பு தான் கேட்ட நாவற்பழத்தின் சத்தத்தையனுசரித்து, "குக்குளு குக்குளு குக்குளு வென்றே" என்னுங் கடைசி யடியைச்சொல்ல, காளிதாசன், அரசனது அபிப்பிராயத்துக்கு ஏற்ப,

"பக்குவ மாகிய சம்புப லங்க
ளக்கவி யேறிய சைத்தகி ளோஇயி
னுக்கன நின்மல மாகுத கத்திற்
குக்குளு குக்குளு குக்குளு வென்றே"

என்று மூன்றடிகளையுஞ் செய்து பூரித்துப் பொருத்திச் சொல்ல, அரையன், 'கவியே! அயலாருடையவெண்ணத்தையுள்ளவாறு கண்டுசொல்வதி லுன்னைப்போன்றவ ரொருவருமில்லை' என்று மிகவும் புகழ்ந்தனன்.

வேந்தர்வேந்தனை போசன், தன்னுருவத்தை மறைத்துக்கொண்டு தாராபட்டணத்தில் ஒருநாள் நடுப்பகலில் ஒருகிழவனை வந்தனானுடைய வீட்டின்வாயிலில் வந்து நிற்க வப்போது, அவ்வந்தனான், வைச்சுவதேவத்தைச் செய்து காகபலியைக் கையிலெடுத்துக்கொண்டு வீட்டுக்கு வெளியில் ஒருசுத்தமான விடத்தில் அப்பலியை வைத்துக் கையைத்தட்டிக் காகங்களை யழைக்க, வந்த காக்கைகளி லொன்று மிகவுங் கடோரமாகக்கூவ, அதைக்கேட்ட பாலப்பருவமுள்ள அவன்மனையாள், கோவெனக்கதறிக்கொண்டு தன்னையகனைத் தழுவிக்கொள்ள வவன் 'பெண்ணே! நீ யிவ்வாறு பயப்படக் காரணமென்ன?' என்ன, அவள் 'என்னைப் போலுங் கற்புடைய மகளிர் இப்படிப்பட்ட கடுஞ்சத்தத்தைக்கேட்டுச் சகிப்பார்களோ?' என்ன, அவன் 'நல்லொழுக்கத்தினாய்! இது தகும் தகும்' என்று சொன்னதைக் கேட்ட வந்தன், 'ஆ! இவள் தானே தன்னுடைய கற்பின்பெருமையைச்

சொல்லிக்கொள்வதனு விரவிற் கொடுஞ்செய்கை
யென்பதில் ஐயமே யில்லை. இதை இன்றிரவே
தும்கிறேன்' என்றெண்ணிக்கொண்டு போய் .
வுடன் அந்துவத்தகாத்துக்கொண்டிருக்கையில்,
தன்கணவன் தூங்குமளவும் வீட்டிலிருந்து உற
மாமிசகண்டங்க ணிறைந்த பெட்டியைத் தோளு
ண்டு தூக்கிவரச்செய்து தான் முன்னே நடக்கை
னும் அவளுக்குத்தெரியாது பின்னே போய், ஏ
தையாற்றி லிறங்கி யிடையிற் றனக்கிடையூறு செ
முதலைகளுக்கு அக்கண்டங்களைப் போட்டுக்கொ
ண்டிப்போய் அக்கரையிலுள்ள வொருவனோடு
பேசிக்கொண்டிருக்கு மீண்டுந் தன்வீடுபோய்ச்
ப்பார்த்துவிட்டு, அரண்மனைக்குப் போய்,
அவைக்கு வந்து, காளிதாசனைப்பார்த்து, "மா
காக்கைமன்கரைய வேபயந்தாள்" என்ன, காளி,
ண்டுகின்று னன்மதையைத் தாண்டியில்" என்ன
"நீண்டவந்த - நன்மதையின் றண்ணீரு ணக்கிய
க்கும்" என்ன, காளிதாசன் "மன்மதழிக் தாமே
என்ன, வேந்தன், உள்ளதை யுள்ளபடி யறிந்
காளிதாசனை மிகவும் புகழ்ந்தனன்.

தாராநகரத்தின் சமீபத்திலுள்ள நதியை
வில் வலைஞர்கள் வலைவீசிக்கொண்டிருக்கையில்
ந்த வெழுத்துக்களையுடைய ஒரு கல்லின் துண்
அதை யிறைவன்சபையின் முன் கொணர்ந்து
னதக் கண்ட போசன், 'முன்னே அனுமானுற் செ
விராமாயணம் இதிற் போடப்பட்டிருக்கிறதெ
யோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்; ஆனா

வெழுத்துக்களை அவசியமாராய்ந்துபார்க்கவேண்டும்’ என்று
சொல்லி, அவ்வெழுத்தறிந்தோர்களைக்கொண்டு சோதித்
துப்பார்க்க, அதில், “முற்செய்த வினைகளின் விளைவு ஐந்
தாக்கள்விடயத்திற் கொடிதாயிருக்கிறதன்றோ!” என்னுந்
தாற்பரியம் நிறைந்த விரண்டடிகள் காணப்பட, இறைவன்,
பவபூதியை நோக்கி, ‘இவ்வடிகளுக்குரிய முன்னிரண்டடிக
ளைச்சொல்’ என்ன, அவன் “நீண்டகண்ணுடையவளின் களங்
கமற்ற குலமெங்கே? இராக்கதன்சேர்க்கையால் வந்த
அபவாதச்சொல் எங்கே?” என்னுங் கருத்துக்கொண்ட
வடிகளைச் சொல்ல, பூபன், அதில் தொனிதோஷமிருக்கக்
கண்டு, அவற்றை “சனகன்பெண் எங்கே? இராமன் மனை
யாள் எங்கே? அரக்கன்வீட்டில் இருப்பு எங்கே?” என்னுந்
தாற்பரியங் கொண்டவைகளாகத் தானேமாற்றிச்சொல்லிக்
காளிதாசனை நோக்கி, ‘நற்கவியே! நீயும் கவியி னிதயத்தைச்
சொல்’ என, அவன் “சிவனைத்தலையிலுடையவனிடத்தில் எந்
தலைகள் விளங்கினவோ, அவை சிவ! சிவ! கழுகின் கால்
களோடு புரளுகின்றன” என்னுங் கருத்துக்கொண்ட வடி
களைக் கூற, இவைகளை அக்கல்லின்புறத்தில் மறுபடிசோதி
த்துப்பார்த்ததி லிருக்கக்கண்டு, மன்னன், காளிதாசனைக்
கட்டிக்கொண்டு களிகூர்ந்து புகழ்ந்தனன்.

வசந்தகாலத்தில் விநோதமாயிருப்பதற்காகப் போ
ஜன், ஒருபுதியமாளிகை கட்டவெண்ணித் தக்கதளஞ் சம்பா
தித்து, அதில் முன்னமே முளைத்துள்ள முதியபுளியமர
மொன்றை வேரொடு களைந்தெறிந்து, அவ்விடத்தில் பெரு
பொன் செலவிட்டுச் சிறந்தமாளிகையொன்று கட்டுவித்துச்
சிறந்த நன்னாளிற் கிருகப்பிரவேசஞ் செய்ய நிச்சயித்திருக்
கையில், அம்மரத்தின்மேல் வெகுகாலமாயிருந்த [illegible]

ஞை ஒரு பிரமராட்சசன், தன்னிருப்பிடத்தை வெட்டிவி
ட்டகோபத்தா லம்மாளிகையுட்புக்குக் குடிகொண்டிருந்த
செய்தியைக் கேட்ட வரசன், மாந்திரிகர்பலரை யனுப்பி
யோட்டச்சொல்ல, அவர்கள் போய்த் தாந்தாங்கற்ற மந்தி
ரங்களை யுச்சரித்துக்கொண்டே யிருக்கையில், அவ்வரக்கன்
திடீரென்று குதித்து அவர்களெல்லோரையுங் கணத்திற்
பரீட்சைசெய்து, சொல்லமாட்டாமையா லொருங்கே
தின்றுவிட்டனன். அவன் இவ்வாறே யப்போதப்போது
வருபவர்களையெல்லாந் தின்றுகொண்டே நிற்க, அரசன்,
மிகவுந் துக்கித்து, 'இவ்வரக்கனை நீக்கும்விதம் யாது?' என்
றுலோசியா நிற்கையில், காளிதாசன் 'தேவ! இவ்வரக்
கன் எல்லாக்கலைகளினும் வல்லவனாயிருப்பது மன்றிக் கவ
னத்திலும் வல்லவனாயிருப்பனென்று தோன்றுகின்றது;
ஆகையால், யானே போய் அவனைக் களிப்பித்துக் காரியத்
தை முடித்துக்கொண்டு வருகின்றேன்' என்ன, அரசனும்
'அவ்வாறே செய்' என்ன, காளிதாசன், இரவில் அவ்வீட்டி
னுட்போய்க் கதவை மூடிவிட்டுப் படுத்துக்கொண்டு அரக்
கன்வரவை யெதிர்பார்த்திருந்தனன்.

அப்போது, அவ்வரக்கன், அவ்விரவின் முன்னியாமத்தி
லே யங்கு வந்துபார்த்து, 'படுத்துக்கொண்டிருப்பவன்
மகாபுருஷனாகக் காணப்படுகிறான்; ஆகையால், ஒவ்வொரு
யாமத்துக்கும் ஒவ்வொரு சமசியையைக் கொடுப்போம்;
பூரியாமற் போவனாயின் தின்றுவிடுவோம்; பூரித்துவிடுவ
னாயின் இவனெண்ணப்படி நடப்போம்'என்று நிச்சயித்துக்
கொண்டு, "எல்லாவற்றுக்கு மிரண்டு" என்னுந் தாத்பரியங்
கொண்டதைச் சொல்ல, காளிதாசன் "செல்வம் வறுமை
களுக்குக் காரணங்களாகிய நல்லபுத்தி தீயபுத்திகள்" என்

னும் பொருள்கொண்டதை யுத்தரமாகச்சொல்ல வதைக் கேட்டுக்கொண்டுபோய் இரண்டாமியாமத்தில் வந்து, "கிழ வன் வாலிபனேடு" என்னும் பொருள்கொண்டதைக் கூற, காளிதாசன் "கூடப் பழகுவதால் மாதர்களால் விடப்படுகி ருன்" என்னும் பொருள்சேர்ந்ததைச் சொல்ல அதைக் கேட்டுக்கொண்டுபோய் மூன்ருமியாமத்தில் வந்து, "ஒரு வன் கோத்திரத்தில்" என்னுங் கருத்துக்கொண்டதைப் பேச, காளிதாசன் "குடும்பத்தைத் தாங்கவல்லவனை புருட னுண்டாகின்ருன்" என்னும் பொருள்கொண்டதைச்சொல்ல வதைக்கேட்டுக்கொண்டுபோய் நான்காமியாமத்தில் வந்து, "பெண் புருடன்போல்" என்னுங் கருத்துறைந்ததைக் கூற, காளிதாசன் "எப்போதாகிருளோ அப்போது அவ்வீடு அழியும்" என்னும் பொருள் கொண்டதைக் கூறக் கேட்டு மிகவுங் களித்து, அவனுக்கெதிரே தோன்றிநின்று, நல்லறி விஞய்! என்னெண்ணப்படி நீயப்போதப்போது சொல் லிவந்த வுத்தரங்களுக்கு மிகவுஞ் சந்தோஷித்தேன்; உன க்குவேண்டியதென்ன?' என்ன, காளிதாசன், 'பகவனே! இவ் வீட்டைவிட்டு நீர் வெளியிற் போய்விடவேண்டும்' என்ன, அரக்கன் 'அப்படியே யாகுக' என்று சொல்லிப் போய்விட் டான். மற்றைநாட் காலையிற் போசன், காளிதாசனது திற மையை வியந்து அவனுக்கு விசேஷ சம்மானம் பண்ணி னன்.

இராசசிரோமணியாய் விளங்கும் போசன், சிங்காதன த்தை யலங்கரித்துக்கொண்டிருக்கையில், வாயிலோன், வந்து பணிந்து, 'இறைவ! தென்றேயத்தோனாகிய மல்லிநாதனென் னுங்கவி வாயிலிற் காத்துக்கொண்டிருக்கிறான்' என்ன, அர சன் 'வரட்டுங்கவி' என்ன, புக்க வக்கவி, அரசனுக்காசிர்வதித்து

அவனாணையாலிருந்து,"மதத்தினால் யானையும், மேகங்களால் ஆகாயமும், நித்தியோற்சவங்களால் வீடும், நிறைமதியால் இராத்திரியும், நன்னடக்கையால்மாதும், வேகத்தினாற் குதிரையும், இலக்கணத்தால் வாக்கும், அன்னப்பறவைகளால் யாறும்,புலவர்களாற்சபையும்,நல்லபுத்திரனாற்குலமும், உன்னாற்பூமியும், சூரியனான் மூவுலகும் விளக்கத்தைப்பெறுகின்றன" என்னுந் தாற்பரியங் கொண்ட செய்யுளைச் சொல்ல, வேந்தன் 'புலவ! உன் விருப்பமியாது?' என, கவி 'என்னைப் பெற்றதாய், என்னையும் என்மனையாளையுங் கோபித்துக்கொள்ளுகிறாள்; யான் அவ்விருவரையுங் கோபித்துக்கொள்ளுகிறேன்; என் மனையாள் என்னன்னையையும் என்னையுங் கோபித்துக் கொள்ளுகிறாள் ; அக்கோபத்துக்குத் தக்க தவறு ஒன்றுமில்லை; ஆகையால்,அரசரே! இதன்காரணத்தை யாலோசித்துப் பாரும்'என்ன,இறைவன் 'இது வறுமையின் கொடுமை'என்று தெரிந்து,அவனுக்கு வேண்டிய பொருள் கொடுத்தனுப்பினன்.

அக்கவி அட்பொருளை யெடுத்துக்கொண்டு போனவுடனே, கவிசேகரனென்னும்பெயரினையுடையவொருகவி,இறைவனாணையால் அவைக்குவந்து மன்னனை வாழ்த்தி, "உலகத்துக்கதிபதியான வரசனே! வாயிலோனினின்று யான் வாரணத்தைப் பெற்றேன்; ஆயினும், உன்னினின்று மதவாரணத்தைப் பெற விச்சிக்கின்றேன்" என்னும் பொருள் பெற்ற பாட்டினைச்சொல்ல, அப்போது,சிங்காதனத்தின்மேற் கிழக்கு முகமாக விருந்த வேந்தன், அப்பாட்டிற்கு மிகவுங் களித்துத் தன்னாணைக்குட்பட்டவத்திசைமுற்றும் அக்கவிக்குக் கொடுத்துவிட்டதாக நினைத்துக்கொண்டு தெற்குமுகமாகத் திரும்பிக்கொள்ள, கவி 'என்ன ? மன்னவனென்னைப்

பார்த்தொன்றுஞ் சொல்லாமன் முகத்தைத் திருப்பிக்கொள்ளுகிறான்; ஆயினும், அவ்விடத்திலும் யான்போய்ச் சொல்லுகிறேன்' என்று சிந்தித்துக்கொண்டே யத்திசையில் அவனுக்கெதிர்முகமாக நின்று, "புதிதாய் இந்தவில்வித்தை யுன்னுலெப்படி யப்பியசிக்கப்பட்டது? மார்க்கணௌகம் வருகின்றது; குணந் திக்கினெல்லையை யடைகின்றது" என்னும்பொருள்வாய்ந்த செய்யுளைச் சொல்ல, மன்னவன், அத்திசையையும் அவனுக்குத் தந்ததாக நினைத்து மேற்குமுகமாகத்திரும்ப, அக்கவி, அவ்விடத்திலும் வந்து, "இரப்போர்களுக்கில்லை யென்று சொல்லுஞ் சொல்லொன்றை நீ யறியாமலிருக்க, உன்னை யிவ்வுலகத்தோர் எல்லாமறிந்தவனென்று சொல்லுவது பொய்" என்னுங் கருத்து நிறைந்த பாவினைக் கூற, செம்மல், அத்திசையையும் அவற்குக் கொடுத்துவிட்டதாக வெண்ணி வடக்குமுகமாகத் திரும்ப, அங்கேயும் வந்து அக்கவி "சத்துருக்களுக்கு முதுகினையும், பிறமாதர்களுக்கு மார்பினையும் நீ கொடாமலிருக்க, உன்னை எக்காலத்திலும் எல்லாவற்றையுங் கொடுப்பவனென்று புலவர் சொல்லுவது வீணே" என்னும் பொருள் சேர்ந்த செய்யுளைப் பேச, வேந்தன், அத்திக்கினையும் அவனுக்குத் தந்ததாக வெண்ணித் தனக்கென்று ஓரிடமின்மையாற் காட்டிற்குப் போக மனையாளை யழைக்கச் சிங்காதனத்தினின்றெழுந்தபொழுது, அக்கவி, அரையன துட்கருத்தை யறியாமல், 'அரசனே! நீ பொன்மழையை யெங்கும்பெய்கையிலும், அபாக்கியமாகிற குடையைப் பிடித்துக் கொண்டிருக்குமென்மீது அதி லொருதுளியும் விழவில்லை' என்று சொல்லிக்கொண்டே வெளியிற் போய்விட்டான்.

அப்போதங்கிருந்த புத்திசாகரனென்னுமமைச்சன், வெறுங்கையோடு வரும் அக்கவியைப் பார்த்து, 'புலவ! வேந்தன்

உனக்கென்ன கொடுத்தான்?' என்ன, அவன் 'ஒன்றுமில்லை' என்ன, மந்திரி 'கவியே! அங்குச் சொன்ன பாக்களைச் சொல்' என்ன, அக்கவி, அந்நான்குசெய்யுட்களையுஞ் சொல்லக் கேட்ட வமைச்சன், அரையன துட்கருத்தைத் திருத்தமாய்த் தெரிந்துகொண்டு, 'கவியே! உனக் கொன்பதுகோடி பொன் றருகின்றேன்; அரசன் எதைக் கொடுத்தானோ, அதை விற்றுவிடு' என்ன, கவியும், அவ்வாறேசெய்யச்சம்மதிக்க, அமாத்தியன், தான்சொன்னபடி பொன்னைத் தந்து கவியையனுப்பிவிட்டு வேந்தனருகில் வந்து நிற்ப, தோன்றல், மந்திரியைநோக்கி, 'புத்திசாகர! நான் இவ்விராச்சியத்தைக் கவிக்குக் கொடுத்துவிட்டேன்; மனைவியோடு காட்டிற்குச் செல்கின்றேன்; அங்குவர வுனக்கு விருப்பமுண்டாகில் வா' என்ன, உழையன் 'தேவ! அக்கவி, ஒன்பதுகோடிபொன்னுக்கு இவ்விராச்சியத்தை விற்றுவிட்டுப் பொன்பெற்றுக்கொண்டு போய்விட்டான். ஆகையால், இவ்வரசாட்சி உம்முடையதே; ஐயமின்றி யாண்டுகொண்டிரும்' என்ன, வேந்தன் புத்திசாகரனை மிகவும் வியந்து புகழ்ந்து சம்மானித்தனன்.

ஒருநாள், போசன், வேட்டையாடவெண்ணி நெருங்கிய காட்டிற் குதிரையேறிச்சென்று வெகுநாழிகைவரை வேட்டையாடிக் களைத்துத் தாகத்தைத் தணித்துக்கொள்ளத் தெண்ணீர்க்குள மகப்படாமையாற் சோர்ந்து குதிரையினின்றிழிந்து வழிக்கடுத்த வொருபெரிய வாலமரத்தின்கீழ்ப் படுத்துக்கொள்ள, அப்பொழுது அவ்வழிக்கணோரிடைப் பெண் மோர்ப்பானையைத் தலையில் வைத்துக்கொண்டு வரக் கண்டு, 'பெண்ணே! என்ன கொண்டுபோகின்றாய்?' என்ன, அவள், முகவொளியாற் கேட்டவன் போசன்றானென்று நிச்சயித்து, 'ஓ! நிருபரே! பனிகுருக்கத்திப்பூ சந்திரகலை சங்கு

ஆகிய இவைகளுக்குச் சமானமானதும், பழுத்த விளாங்கனிக்கு நிகரான வாசனையுள்ளதும், இளம்பெண்ணாற் கடையப்பெற்றதும், எல்லா நோய்களையும் நீக்கத்தக்கதுமான மோரை யருந்தும்' என்ன, அரசன், மிகவுஞ் சந்தோஷித்து அம்மோரை யருந்தித் தாகந்தணிந்து, அவளை நோக்கி, 'மாதே! உனக்கு என்ன வேண்டும்?' என, அவள் நாணத்தாற் றலைகுனிந்து அரசனைக் கடைக்கண்ணால் நோக்கிக்கொண்டு, 'என்னைக் கன்னிகையாகவே நினையும். ஆம்பல் சந்திரனையும், சக்கரவாகஞ் சூரியனையும், சாதகப்புள் மேகத்தையும், வண்டு பூங்கொத்தையும், குயில் தேமாவையும், கற்புடையமனையாள் தன்னாயகனையும் எப்போதும் விரும்பி நிற்குந் தன்மைபோல என்மனநிலையும் உம்மையே பார்த்துக்கொண்டிருக்க ஆசைப்படுகின்றது' என்ன, வேந்தன், அவ்வாக்கியத்தினால் மிகவுங் களித்து, 'காரிகையே! உன்னை யெனது பட்டமகிஷியான லீலாவதிதேவியினது அநுமதியின்மேற் கலியாணஞ்செய்துகொள்ளுகிறேன்' என்று சொல்லி, அப்பெண்ணைக் கூடவே பட்டணத்துக்கு அழைத்துப்போய், அவ்வாறே மணம்புரிந்துகொண்டனன்.

மற்றொரு தினம், வேந்தன் நீராடிக்கொண்டிருக்கையில், அவனுக்கு நீர்சொரிந்துகொண்டிருந்த வொருபெண்ணினுடைய கையினின்று நழுவிய பொற்பாத்திரம் படியின்வரிசையிற் சத்தித்துக்கொண்டே வீழ்வதைப் பார்த்திருந்த மன்னவன், சபைக்குவந்து, காளிதாசனைப் பார்த்து, 'நற்கவியே! "டண்டண் டண்டண் டண்டண் ணென்றே" என்னுஞ் சமஸ்யையைப் பூரித்துச்சொல்' என்ன, காளிதாசன், காவலன்கருத்தை நன்றாயுணர்ந்துகொண்டு,

"அண்ணால் லயிடேகத்தின் மதமார்
பெண்ணின் கையின்வீழ் பெறுபொற் கல

நண்ணும் படியின் வழிநா தமிடின்
டண்டன் டண்டன் டண்டன் னென்றே''

என்று பூரித்துச்சொல்ல, அரசன் வியந்து அட்சரத்துக்கு இலட்சம் பொன் றந்தனன்.

பின்னொருநாள், போசன், பட்டணத்தின் வெளியிலுள்ள வொருகுளத்தின் புதுநீருண் மூழ்கி, தான் சிறுவயதுமுதற் பழகிவந்த யோகவித்தையாற் கபாலசோதனை முதலியவைகளைச் செய்துகொண்டிருக்கையில், அதன் வழியாய் ஒரு சிறுமீன்குட்டி தலையினுட் பிரவேசித்தது. அரசனே சிலநாழிகைக்குப்பின் தன்பட்டணம் போய்ச்சேர்ந்தான். அதுமுதல், அரசனுக்குத் தலைநோயுண்டாகிப் பொறுக்கமுடியாத வேதனையைச் செய்யவே, அவன், உடறேய்ந்து முகம்வாடி வொளியிழந்து உணவிறந்து வருந்துவதைக் கண்ட வைத்தியர்களெல்லோரும், தாந்தாங் கற்றநூலின் படி தக்க சிகிச்சை செய்து பார்த்தும் அது நீங்காமையால் 'இனியென்ன செய்வோம்?' என்று வாடிநிற்பதைப் பார்த்த போசன், தன்மந்திரியை யழைத்து, 'புத்திசாகர! என்னிடத்திற்கு ஒருவைத்தியனும் இனி வரவேண்டியவவசியமில்லை. நம்முடைய வரண்மனையிலுள்ள வாகடமுதலிய வைத்திய நூல்களையெல்லாம் யாற்றுவெள்ளத்தில் விட்டிடு. எனக்கு இனிப் பிழைப்பில்லை' என்ன, அதைக்கேட்ட மந்திரியும், அவன்மூலமாய் அரசனது நிலையை யறிந்த பட்டணத்தவர்களும், கவிகளும் கண்ணீர் பெருக்கிக்கொண்டு நின்றனர்.

இங்கிது இப்படியிருக்கையில், அங்குத் தேவசபையில் தேவேந்திரன், முனிவர்கூட்டத்தினிடையிலிருக்கும் நாரத முனியை நோக்கி, 'முனிவரே! பூவுலகி லிப்போதுள்ள விசே

டம்பாது?' என்ன, நாரதமுனி 'தேவநாத! பேராச்சரிய மொன்றுமில்லை; ஆனாலுந் தாராநகரத்துக்கதிபனான போச மகாராசன் சகிக்கமுடியாத தலைவலியால் மிகவும் வருந்தி மரணத்தறுவாயி லிருக்கிறான்; அத்தலைநோய் ஒருவைத்தியனாலும் நீக்கப்பட வில்லை: ஆகையால், அங்குள்ள வைத்தியரெல்லோரும் அரசனால் வேற்றுநாட்டுக் கோட்டப்பட்டனர்; வைத்தியநூல்களும் பொய்யென்றே நிச்சயிக்கப்பட்டன' என்ன, இதைச் செவியுற்ற விந்திரன், தன்னருகிலுள்ள தேவவைத்தியராகிய அச்சுவினிதேவர்களைப் பார்த்து, 'ஓ! தேவவைத்தியர்களே! தன்வந்திரிபகவானால் ஏற்படுத்தப்பட்ட வைத்தியநூ லெப்படிப்பொய்யாகும்?' என்ன, அவர்கள் 'தேவேந்திர! இச்சாத்திர மொருபோதும் பொய்யாகமாட்டாது. ஆனால், அப்போசன் தேவர்கண்மாத்திரமறிந்துள்ள நோயினாற் பீடிக்கப்படுகிறான்' என்ன, இந்திரன் 'மனிதர்களா னீக்கமுடியாத அவ்வியாதியாது? எப்படியுண்டாயிற்று?' என்ன, அவர்கள் 'தேவ! போசன் கபாலசோதனம் பண்ணுகையில் ஒரு சிறுமீன்குட்டி அவனது கபாலத்தினுட் போய்விட்டது; அதன் மூலமாய்த்தான் இவ்வியாதியுண்டாயிற்று' என்ன, இந்திரன் 'வைத்தியர்களே! நீங்கள் அங்கேபோய் அவ்வரசனுக்குச் சிகிச்சை செய்ய வேண்டும்; இல்லாவிடின், இனி வைத்தியநூலுக்குப் புவியிற் சித்தி யில்லாமற்போய்விடும்' என்ன, அவர்களும், இந்திரனுடைய கட்டளையால் மனிதவுருவையெடுத்துக்கொண்டு, தாராநகரத்தை யடைந்து வாயிலோனைக் கிட்டி, 'வாயிலோய்! நாங்கள் வைத்தியர்கள்; போசன் பொய்யென்று சொன்ன வைத்தியநூலை நிலைநாட்டி, அவனுடையநோயையும் போக்குவதற்காகக் காசிதேசத்தினின்றும் வந்தேம்.'

என்ன, வாயிலோன் 'வைத்தியனொருவனையு முள்ளேவிடக் கூடாதென்று அரசர் கட்டளையிட்டிருக்கிறார்; அன்றியும், உங்கள்வரவைத்தெரிவிப்பதற்கு இது சமயமுமன்று' என்று சொன்னான்.

இப்படியிருக்குஞ் சமயத்தில், ஒருதொழிலினிமித்தம் வெளியில்வந்த புத்திசாகரன், இவர்களைக் கண்டு, 'நீவிர் யாவர்?' என்ன, அவர்களுந் தம்வரலாற்றை யுள்ளவாறு சொல்லக்கேட்டு, அவர்களை யழைத்துக்கொண்டுபோய் அரசன்முன்னேவிட, அரசனும் அவர்களைத் தேவர்களாக வெண்ணிக் கௌரவிக்க, அவர்கள், அரையனைப் பார்த்து, 'மன்ன! அஞ்சேசல்; நின்வியாதி நீங்கிற்று; ஆனாலும், ஏகாந்தமானவிடத்திற் கணப்பொழுது நீ வந்திருக்கவேண்டும்' என, அரையனும் அவ்வாறே வர, அவர்கள், அவனை மோகப்பொடியான்மயக்கிக் கபாலத்தைக் கீறி அதனுளிருக்கும் அச்சிறுமீன்குலங்களை யெடுத்து, ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொண்டு சந்தானகரணியென்னும் மூலிகையான் முன்போலாகச் செய்து, மாற்றுப்பொடியான் மயக்கத்தை நீக்கி அச்சிறு மீன்குலங்களை யவனுக்குக் காட்ட, தோன்றல், அவற்றைப் பார்த்து ஆச்சரியமுற்று, 'இவை இங்கெப்படி வந்தன?' என, அவர்கள், 'மன்ன! பாலியமுதல் நீ பழகிவந்த கபாலசோதனத்தாற் கிடைத்தவை யிவை' என, வேந்தன், அவர்களை யச்சுவினிதேவர்களாக நினைத்து, அதைச் சோதிக்கும் பொருட்டு 'எமக்குப்பத்திய மென்?' என்ன, அத்தேவவைத்தியர்கள் "வெந்நீரில் நான மாடலும், பாலருந்துதலும் ஓ! மனிதர்களே! உங்களுக்குப் பத்தியம்" என்னுந் தாற்பரியங்கொண்ட மூன்றடிகளைச் சொல்ல, மன்னன், இடையில் 'மனிதர்களே!' என்று விளித்ததைக்கேட்டு 'நாங்கள் மனிதர்களாயின் நீங்கள் யாவர்?'

என்று அவர்களின்கைகளைத் தனது கைகளாற் பிடித்துக் கொள்ள, உடனேயவர்கள், இவன்கையை யுதறிக்கொண்டு, 'நான்காவதடி காளிதாசனாற் பூரிக்கப்படும்' என்று சொல்லி மறைந்து போயினர்.

பிறகு, அண்ணல், பேராச்சரியமுற்றவனாய் அச்செய்தியையெல்லோரோடுஞ்சொல்ல, கேட்டயாவரும் ஆச்சரியப்பட்டிருக்கையில், காளிதாசனை நோக்கி, 'கவியே! அம்மூன்றடிகளுக்கேற்ற நான்காவதடி சொல்' என்ன, அவன் "இனியதும் ஆநிள்ளதுமாகியபோசனமும்" என்னுங்கருத்துள்ளதைக் கூற, இறைவன், காளிதாசனைத் தேவ புருடனாக நினைத்துச் சம்மானம் பண்ணினான்.

வேந்தர்வேந்தனாபோசமகாராசன், ஒருநாளிரவிற் காளிதாசனை யேகாந்தமானவிடத்தி லழைத்துவைத்துக் கொண்டு, 'கவியே! எனக்குச்சரமகவியொன்று செய்துபடி' என, காளிதாசன், மிகவுங் கோபித்துக்கொண்டு அரசனைப் பலவாறு நிந்தித்துவிட்டு, விரைந்துசென்று ஏகசிலாநகரத்தைச் சேர்ந்து அங்கோரிடத்திலேகாந்தமாக விருந்தனன். அரசனே காளிதாசனைத் தேட நினைத்துச் சிலரை யனுப்ப, அவர்களு மங்கங்கேபோய்த் தேடிக் காணாமற் கடைசியாக வேகசிலாநகரஞ்சேர்ந்து, அங்குக் காளிதாசனிருக்கக் கண்டுவந்து மன்னனுக்கறிவிக்க, எவ்வாற்றானுந் தனது சரமகவியைக் கேட்க விரும்பிய பூபன், 'நாம் இக்கோலத்தோடே போகி னவன் சொல்லான்; ஆகையால், நம்முருவத்தை மறைத்துக்கொண்டுபோய், அவனை வஞ்சித்து அக்கவியைக் கேட்போம்' என்று ஆலோசித்து, அதற்கேற்ற சன்னியாசிவேடந் தரித்துக்கொண்டுசென்று ஏகசிலாநகரத்தின் குளக்கரையிற்காளிதாசனிருக்கப் பார்த்து, அங்கே போய் நிற்க, காளிதாசன், வந்த துறவியைத் தொழுது, 'பெரியோரே! உம்முடைய இருப்பிடம் எது?' என, 'தாராநகரம்' என்ன, கவி 'அவ்விடத்திற் போசன் சேமமாயிருக்கின்றனா?' என, சன்னியாசி 'யான் அதைச்சொல்லக்

தக்க நிலையிலில்லை' என, கவி 'அவ்விடத்தில் விசேஷவார்த்தையுண்டாயின் மறையாது சொல்லவேண்டும்' என்ன, நீத்தோன் 'போசன் விண்ணுலகம் புக்கனன்' என்றான்.

அதைச் செவியேற்ற காளிதாசன், பெருங்காற்றிற் சாய்ந்த வாழைபோற் புவியில் விழுந்து துடித்து, எழுந்து, 'தேவ! உம்மைவிட்டு நாங்க ளெப்படி யுயிர்பிழைத்திருப்போம்? நாங்களும் உம்மோடே வந்துவிடுகின்றோம்' என்று சொல்லிக் கதறியழுது, பின் ஒருவாறு தேறி,

"இன்று தாரையி ழந்தது காப்பினைத்
துன்று நாமகள் சோர்வின ளாயின
ளொன்று பாவல ரியாவரு மூன்றில
ரென்று போலொளிர் போசன்விண் ணெய்தவே"

என்னுஞ் சரமகவியைச் சொல்ல, கேட்ட கபடசன்னியாசி, உடனே பூமியில் விழுந்து மூர்ச்சிக்க, கண்ட காளிதாசன் 'ஆ! போசனே இவன்; சன்னியாசிவேடம் பூண்டுவந்து என்னை வஞ்சித்தனன்' என்று நினைத்து, அக்கவியை

"இன்று தாரையி மைந்தது காப்பினைத்
துன்று நாமகள் சோர்விலளாயின
ளொன்று பாவல ரியாவரு மூன்றின
ரென்று போலொளிர் போசன்மண் ணெய்தவே"

என்று மாற்றிச்சொல்ல, உடனே யுயிர்த்தெழுந்த போசன் காளிதாசனைக் கட்டிக்கொண்டு புகழ்ந்து, அவரோடு தாரா நகரடைந்து வெகுநாள் வாழ்ந்திருந்தனன்.

போஜராஜ சரித்திரம்
முற்றிற்று.

---

போசமகா ராசன் புகழ்ச்சரிதத் தைத்தமிழில்
வாசகமாப் புன்னை வளர்மாட—நூசியொரு
சீனிவா சன்செய்து சீர்விளம்பி யின்றுலவிற்
பானுதினத் தேமுடித்தான் பார்.

---

# அறிக்கை



## பதிப்பிக்கப்பட்டன:—

| | | |
|---|---|---|
| கோவலவெண்பா | ... ... ... | 0—4—0 |
| திருமால்குறள்வெண்பா | ... ... | 0—0—6 |
| பார்த்தசாரதி பஞ்சரத்தினம் | ... ... | 0—0—6 |
| புன்னை யாதிமூலப் பதிகம் | ... ... | 0—0—3 |

## பதிப்பிக்கப்படுவன:—

இளையாழ்வார் பெருமை.

விக்கிரமோர்வசீய நாடகம் (தமிழ்மொழிபெயர்ப்பு.)

உத்தரராமசரித நாடகம் ஷை

சீவகவெண்பா.

மகாபாரதவெண்பா.

சுநீதி சரித்திரம்.

துருவ சரித்திரம் { உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுள். }

திருவல்லிக்கேணிக்கலம்பகம்.